# UTTAMAR CHARITAM

## GRADE 5

469

# உத்தமர்கள் சரிதம்

மலர் 5


OFFICE OF THE REGISTRAR OF BOOKS
6-JAN 1926
MADRAS





PUBLISHED BY

C. S. DIKSHITAR & Co.,

*Book-sellers & Swadesamitran Agents,*

KUMBAKONAM.

1925

[Price As. 7

TB
0 31,6
A2 J7 x
N25
177333

## யுகங்கள் 4.

1. கிருத யுகம். 2. திரேதாயுகம். 3. துவாபரயுகம். 4. கலியுகம்.

## தமிழ் வருஷங்கள் 60.

| | | | |
|---|---|---|---|
| பிரபவ | சித்திரபானு | ஹேவிளம்பி | பரீதாபி |
| விபவ | சுவபானு | விளம்பி | பிரமாதீச |
| சுக்ல | தாரண | விகாரி | ஆனந்த |
| பிரமோதூத | பார்த்திப | சார்வரி | ராக்ஷஸ |
| பிரஜோத்பத்தி | விய | பிலவ | நள |
| ஆங்கிரஸ | ஸர்வஜித்து | சுபகிருது | பிங்கள |
| ஸ்ரீமுக | ஸர்வதாரி | சோபகிருது | காளயுக்தி |
| பவ | விரோதி | குரோதி | ஸித்தார்த்தி |
| யுவ | விக்ருதி | விசுவாவஸு | ரௌத்திரி |
| தாது | கர | பராபவ | துன்மதி |
| ஈஸ்வர | நந்தன | பிலவங்க | துந்துபி |
| பஹுதான்ய | விஜய | கீலக | ருத்ரோத்காரி |
| பிரமாதி | ஜய | ஸௌம்ய | ரக்தாக்ஷி |
| விக்கிரமா | மன்மத | ஸாதாரண | குரோதன |
| விஷு | துன்முகி | விரோதிகிருது | அக்ஷய |

## தமிழ் மாதங்கள் 12.

| | | | |
|---|---|---|---|
| சித்திரை | ஆடி | ஐப்பசி | தை |
| வைகாசி | ஆவணி | கார்த்திகை | மாசி |
| ஆனி | புரட்டாசி | மார்கழி | பங்குனி |

## கிழமைகள் 7.

| | | | |
|---|---|---|---|
| ஞாயிறு | செவ்வாய் | வியாழன் | சனி |
| திங்கள் | புதன் | வெள்ளி | |

## நக்ஷத்திரங்கள் 27.

| | | | |
|---|---|---|---|
| அசுவதி | பூசம் | சுவாதி | திருவோணம் |
| பரணி | ஆயில்யம் | விசாகம் | அவிட்டம் |
| கார்த்திகை | மகம் | அனுஷம் | சதயம் |
| ரோஹிணி | பூரம் | கேட்டை | பூரட்டாதி |
| மிருகசீர்ஷம் | உத்திரம் | மூலம் | உத்திரட்டாதி |
| திருவாதிரை | ஹஸ்தம் | பூராடம் | ரேவதி |
| புனர்பூசம் | சித்திரை | உத்திராடம் | |

# UTTAMAR CHARITAM

## GRADE 5

# உத்தமர்கள் சரிதம்

## மலர் 5






FIRST EDITION


PUBLISHED BY

**C. S. DIKSHITAR & Co.,**

*Booksellers & Swadesamitran Agents, Kumbakonam.*

1925


*All rights reserved]* [Price As. 7.

லும், மாணவர்களும், உபாத்தியாயர்களும் இன்றும் அடைந்து வரும் நன்மைகள் அனேகம்.

"பிள்ளைகளே! நீங்களும் இவ்வாறு கல்வியில் தேர்ச்சியடைந்தால், இத்தகைய புகழும் புண்ணியமும் பெறத் தக்கவர்க ளாவீர்கள்.

## 7. சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள்.

கடவுளை அறிவிக்கும் மார்க்கத்திற்குச் 'சமயம்' என்று பெயர். உலகில் பலவகைச் சமயங்கள் வழங்குகின்றன. சிவபெருமானே உண்மைக் கடவுள் எனக்கொண்டு வழிபடும் மார்க்கம் சைவ சமயமாகும். இச்சமயத்தை விருத்தி செய்த ஆசிரியர் நால்வர், * அவர்களுள் சுந்தரமூர்த்தியும் ஒருவர். கைலாசத்திற் கண்ணுடியில் பிரதிபலித்த சிவனது சுந்தர வடிவமே 'சுந்தரர்' ஆவார். ஆலகால விஷத்தைத் தமது கையில் ஏந்திய காரணத்தால் இவர் "ஆலால சுந்தரர்" எனவும் பெயர் பெற்றார்.

சுந்தரர் கைலாசத்தில் கடவுளுக்குப் புஷ்பத் தொண்டு பூண்டவர். இவர் ஒரு நாள் புஷ்பம் எடுக்கப் பூஞ்சோலைக்குப் போனார். அங்கு நின்ற கமலினி, அனிந்திதை என்னும் பார்வதி தேவியின் சேடிகளான இரு பெண்களையும் இச்சித்தார்.

* சம்பந்தர், அப்பர், சுந்தரர், மாணிக்கவாசகர்.

அப்பெண்களும் இவரைக் காதலித்தார்கள். இத னைக் கடவுள் அறிந்து சுந்தரரை நோக்கி "அன்பா! நீ பெண்களை இச்சித்தாய். ஆதலால் பூலோகத்தில் மனிதனாய்ப் பிறந்து, இக்கன்னி கைகளை மணந்து, பிறகு திரும்பி வா," என்று கட்டளையிட்டார். அதுகேட்ட சுந்தரர் மனங் கலங்கி "சுவாமி! அடியேன் மண்ணுலக வாழ்க் கையில் மயங்கும்பொழுது, தேவரீர் வந்து என் மனதைத் தங்கள் மேல் நிலை நிறுத்திக் காப்பாற்ற வேண்டும்" எனப் பிரார்த்திக்கக் கடவுளும் அதற்கு இசைந்தருளினர்.

பின்பு சுந்தரர் திருநாவலூரிலே, வேதிய குலத்தில், சடையனார், இசை ஞானியார் என்ற தம்பதிகளுக்குப் புத்திரராகப் பிறந்தார். பெற் றோர்களும் அக்குழந்தைக்கு 'நம்பி யாரூரர்' எனப் பெயரிட்டுக் கல்விபுகட்டி, உரிய காலத்தில் உப நயனம் செய்து வைத்தார்கள்.

ஆரூரர், மணப்பருவ மடைந்தபின், அவ ரது தந்தை புத்தூரிலுள்ள சடங்கவிசிவாசாரி யருடைய புத்திரியை, இவருக்கு மணம் பேசி முடித்தார். ஆரூரர் மணக் கோலங்கொண்டு குதி ரைமேலேறி, புத்தூரை அடைந்து மணப்பந்த லில் அமர்ந்தார்.

பரமசிவன் கைலாயத்தில் வாக்களித்தபடியே, ஓர் கிழப்பிராமணராகி, மணப்பந்தலை அடைந்

தார். அங்குள்ளவர்களை நோக்கி "இந்த நம்பி யாரூரான் எனக்கு அடிமை" என்றார். அது கேட்ட ஆரூரர் கோபித்து "நீ பித்தனோ! பிராமணர் அடிமையாதல் எங்குமில்லை," என்று இகழ்ந்தார். கிழவர், "ஆரூரா! நான் பித்தனானாலும், பேயனானாலும் சரி; உன் பாட்டன் எழுதிக்கொடுத்த அடிமை ஓலை என்னிடம் இருக்கின்றது" என்றார். ஆரூரர் அவ்வோலையைப் பிடுங்கிக் கிழித்தெறிந்தார். "அடே! "அடே!! இது முறையோ!!" என்று கிழவர் கூச்சலிட, அங்குள்ளோர் 'கிழவரே! தங்களுக்கு எந்த ஊர்?" என்றார்கள். என்னுடைய ஊர் திருவெண்ணெய் நல்லூர் என்று கிழவர் சொல்ல, "அங்கேயே உமது வழக்கைத் தீர்த்துக்கொள்வோம் வாரும்" என்று சொல்லி எல்லோரும் அவ்வூரை அடைந்தார்கள். கிழவர் அங்குள்ள சபையாரிடம் மூல ஓலையைக் காட்ட அதில் "திரு நாவலூர் நம்பியாரூரான் என்ற நானும், என் சந்ததியாரும் திருவெண்ணெய் நல்லூர் பித்தருக்கு அடியவர்கள்" என்று எழுதியிருந்தது. சபையாரும் "ஆரூரரே! நீர் கிழவருக்கு அடிமை செய்வதே நீதி," என்று முடிவு சொன்னார்கள்

பின்பு சபையோர், "கிழவரே! நீர் எம்மூர் என்றீரே, இவ்வூரில் உமது வீடு எது?" என்றார்கள். "வாருங்கள் காட்டுகிறேன்" என்று

அவர்களை அழைத்துக்கொண்டு, அங்குள்ள ஆல யத்துட் சென்று கிழவர் மறைந்தார். அதுகண்ட யாவரும் திகைக்க, ஆரூராருக்குப் பூர்வ ஞானம் உதித்தது. பரமசிவனும் இடபாரூடராய்க் காட்சி கொடுத்து, "சுந்தரா! கைலாஸத்தில் வரந் தந்த படியே, உன்னைத் தடுத்தாட் கொண்டேன். எனக்கு அர்ச்சனை, பாட்டேயாகும். ஆகையால் என் புக ழைப்பாடு," என்று சொல்ல, சுந்தரர் "சுவாமி! தேவரீரை என்னென்று பாடுவேன்" என்றார். "நீ என்னைப் பித்தன் என்றபடியே, என் பெயர் "பித்தன்" என்றேபாடு" என்று ஆசீர்வதித்துக் கடவுள் மறைந் தருளினர். உடனே சுந்தரர்.

"பித்தா! பிறை சூடி! பெருமானே! அருளாளா!
எத்தால் மறவாதே நினைக்கின்றேன் மனத்துன்னை
வைத்தாய் பெண்ணைத் தென்பால் வெண்ணெய்
[நல்லூரருட் டுறையுள்,
அத்தா! உனக்காளாயினி அல்லே னெனலாமே"

என்ற முதற் பாடலையுடைய திருப்பதிகத்தைப் பாடி முடித்தார்.

பின்பு சுந்தரர் பல ஸ்தலங்களையும் தரிசித் துக்கொண்டு, திருவாரூரை அடைந்து சிவதரி சனம் செய்து கொண்டிருந்தார். முன்பு கைலா ஸத்தில் இவரைக் காதலித்த கமலினி என்பவர். இவ்வூர் கணிகையர் ஜாதியில் பிறந்து, பரவையார் என்னும் பெயருடன் விளங்கினர். அவரும்

மங்கைப்பருவம் அடைந்து தினமும் சிவ தரி சனம் செய்துகொண்டு வந்தார். ஒருநாள் சிவ சன்னதியில் இவர்களிருவரும் சந்திந்து ஒருவர் மேல் ஒருவர் இச்சை கொண்டார்கள். கடவுள் அருளால் சுந்தரர் பரவையாரை மணந்து சுக மாய் வாழ்ந்திருந்தனர்.

பின்னுட் சென்று சுந்தரர் தொண்டை நாட் டிலுள்ள திருவொற்றியூரை அடைந்தார். அங்கே அனிந்திதை என்ற மாது வேளாளர் குலத்தில் பிறந்து, சங்கிலியார் என்னும் பெயருடன் மணப் பருவம் அடைந்திருந்தார். பகவான் அருளால், அங்குள்ள மகிழ மரத்தடியில், "உன்னைப் பிரிவ தில்லை" என்று சங்கிலியார்க்கு வாக்குக்கொடுத்து அவரை மணந்து சிலகாலம் சுகமாய் வாழ்ந்திருந் தனர்.

இவ்வாறிருக்க, ஒரு நாள் சுந்தரருக்குத் திருவாரூர் வசந்த உற்சவம் ஞாபகத்தில் வந்து, உடனே தியாகேசனைத் தரிசிக்கப் புறப்பட்டு அவ் வூர் எல்லையை அடைந்தார். அப்பொழுது அவ ருக்கு இரண்டு கண்களும் மறைந்தன. இது சங் கிலியாரை மறந்து வந்ததால் நேர்ந்த தென்ற றிந்து, ஒற்றியூரனைத் தியானித்துப் பதிகம் பாடி ஞர். சுந்தரர் மிகவும் வருத்தப்பட்டுப் பரமசிவனை வேண்டிப் பல முறை வணங்கி, காஞ்சிபுரத்தில்

இடக்கண்ணும், திருவாரூரில் வலக்கண்ணும் விளக்க முற்றார்.

சுந்தரர், சங்கிலியாரை மணந்து வந்ததைக் கேள்வியுற்ற பரவையார் கோபத்துடன் இருந்தார். அதனால் சுந்தரர் பரவையாரிடம் போக மயங்கித் தம்மையாட்கொண்ட கடவுளை வேண்ட, அவருடைய பக்திக்கும், அன்புக்கும் இரங்கி, தியாகேசர் அன்று அர்த்த ராத்திரியில், பரவையாரிடம் தூதாகச் சென்றார். பகவான் பரவையார் கோபத்தைத் தணித்து அவரைச் சுந்தரரோடு சேர்த்தருளினார்.

மறுபடியும் யாத்திரை செய்து வருகையில், உயிரிழந்த ஒரு பிள்ளையையும் பிழைப்பித்து பற்பல இடங்களையும் தரிசித்துக்கொண்டு, சேரமான் பெருமாள் என்னும் ஒரு பக்தருடன் சினேகங் கொண்டார். அவருடன் திருவஞ்சைக்களம் என்ற ஸ்தலத்தை அடைய, அங்கு கைலாஸத்திலிருந்து கடவுளால் அனுப்பப்பட்ட வெள்ளையானை வந்தது. அதன்மேலேறிச் சுந்தரர் கைலாஸம் சேர்ந்தார். சேரமான் பெருமாளும் சுந்தரரைப்பின் பற்றிக் கைலையை அடைந்தார். இவர்களிருவரும் அங்கு சிவகணங்களுக்குத் தலைவராய் விளங்க, பரவையாரும் சங்கிலியாரும் கைலையை அடைந்து, முன்போல் உமாதேவியாரின் சேடியர்களானார்கள்.

---

# 8. காளிதாஸர்.

---

பிள்ளைகளே! தமிழ் மொழியில் கம்பரும், ஆங்கிலத்தில் ஷேக்ஸ்பியரும் புகழ்பெற்றிருப்பது போல் வடமொழியில் காளிதாஸர் என்பவர் கீர்த்தியாய் விளங்கினர். இவருக்கு இந்தப் பெயர் வந்ததற்குக் காரணம் என்னவென்றால்:—

பரதகண்டத்திலே மகிஷாபுரி என்னும் நகரத்தில் மாகேந்திரன் என்னும் அரசன் இராஜ்ய பரிபாலனம் செய்து வந்தான். அவன் மனைவியின் பெயர் அன்னபூரணி. அவர்களுக்கு அழகிற் சிறந்த ஓர் சற்புத்திரி பிறந்தாள். அவள் சகல கலைகளிலும் வல்லவளானள். அவளுடன் கல்வியில் வாதாடி வெல்பவர்க்கே அவளைக் கல்லியாணஞ் செய்து கொடுப்பதாக அவ்வரசன் நாடெங்கும் விளம்பரஞ் செய்தான். அது கண்டு பல தேசத்துக் கவிவாணர்களும், அரசர்களும், வந்து, அவளுடன் வாதாடித் தோல்வி யடைந்தார்கள். இவ்வாறு பல நாள் கழிய, தன் மகளுக்கு நாயகன் கிடைக்காததைக் குறித்து அரசனுக்குக் கவலையுண்டாயிற்று.

பிறகு, தோல்வியடைந்த கவிகளெல்லாம் ஒன்று கூடித் தங்களை அவமானப்படுத்திய அந்த இராஜகுமாரியை வெல்ல ஓர் சூட்சி செய்தார்கள்.

அதற்கேற்ற ஒரு ஆளைத் தேடிப் புறப்பட்டுப் போகும் வழியிலே, தன் ஆட்டு மந்தைக்கு உணவின் பொருட்டு, நுனிமரத்தில் ஏறி அடிமரத்தை வெட்டிக்கொண்டிருந்த ஒரு மடையனைக் கண்டார்கள். இம்மூடனே நமது எண்ணத்தை முடிக்கத்தக்கவன்" என்று கருதி, அவனைத் தங்கள் வீட்டிற்கு அழைத்துச் சென்று, விலையுயர்ந்த ஆடையாபரணங்களால் அலங்கரித்தார்கள்.

"யார் எது கேட்டாலும் "கை சமிக்கையன்றி வாயால் பேசக்கூடாது" என்று அவனுக்குச் சொல்லி, ஒரு பல்லக்கில் அவனை ஏற்றித் தாங்களே சுமந்து இராஜ சமுகத்தை அடைந்தார்கள். அரசனும் மிக ஆவலுடன் அவனை வரவேற்று உபசரித்தான். தன் எதிரி மௌனி எனத் தெரிந்துகொண்ட இராஜகுமாரி "உலக காரணம் ஒன்றே" என்னுங் குறிப்புத் தோன்ற ஒரு விரலைக் காட்டினாள். அது கண்ட அம்மூடன் யாது கருதியோ இரு விரல்களைக் காட்டினான். இதன் பொருளைக் கூடவிருந்த புலவர்கள் விரித்துரைத்து "உலககாரணம் இரண்டு" என்று ஸ்தாபித்தார்கள். அதற்கு அந்நங்கையும் சம்மதித்து அவனுக்கு மாலையிட்டாள்.

அன்றிரவு பள்ளியறைக்கு மணமகன் போனான். அங்குள்ள வைபவங்களை என்றுங் கண்டறியாதவனாதலால், பிரஞ்ஞையற்று பஞ்சணை

யில் அயர்ந்து நித்திரை செய்தான். இராஜகுமாரியும் பள்ளியறையை அடைந்து, தனது நாயகன் நித்திரை செய்வதைக் கண்டாள். பலவழியில் எழுப்பியும் அவன் எழுந்திராமையைக் கண்டு, அவள் தாம்பூலந் தரித்துத் தம்பலத்தை அவன் வாயில் உமிழ்ந்தாள். அதனுல் நித்திரை தெளிந்த மணமகன், தான் இருக்கும் இடத்தை மறந்து, ஆட்டு மந்தையில் உறங்கும் வழக்கத்தை எண்ணி, ஆடுகள் புழுக்கை போடுவதை நினைத்து "சீ! சீ!" மூதேவி ஆடே!" எனப் பிதற்றி விழித்தான்.

இதைக் கேட்ட இராஜகுமாரி திகைத்துக் கோபாவேசமாய் ஒரு கத்தியை உருவிக்கொண்டு "நீயார்? உன் வரலாறு என்ன? உள்ளதைச் சொல்." என்று அவனை அதட்டினுள். அவன் உடனே நடு நடுங்கி "தாயே! என்னை வெட்ட வேண்டாம். நான் அரிஹர புரத்திலுள்ள அனந்த நாராயண அய்யரின் புத்திரன். என் பெயர் அரிஹரன். என் மூடத்தனத்தைக் கண்ட என் பிதா, என்னை ஆடு மேய்க்குந் தொழிலில் அமர்த்தினுர். நான் மந்தையிலிருந்த பொழுது, சில புலவர்கள் என்னைப் பிடித்து வந்து இவ்வாறு செய்தார்கள்," என்று கூறினுன். அதனைக் கேட்ட இராஜகுமாரி அவனைத் தேற்றி, "ஓ பிராமணு! இவ்வூருக்கு மேற்கே ஒரு காளிகோவில்

இருக்கின்றது. அக்கோயிலுட் சென்று கதவை மூடிக்கொள். காளிதேவி வந்து கதவைத் தட்டினுல், நீ திறக்காதே." என்ன காரணம் என்ருல், "தேவி! இக்கதவின் துளைவழியாய் உன்கைச் சூலத்தால் பீஜாக்ஷரத்தை என் நாவில் எழுதினுல், கதவைத்திறப்பேன்," என்று சொல். அவள் அவ்வாறே அருள் புரிவாள் என்று கூற, அவனும் கோவிலுக்குச் சென்று, தேவியின் வரம் பெற்று, மீண்டும் இராஜ குமாரியிடம் வந்தான். அளவிறந்த அதிவிசித்திர கற்பனுலங்காரச் சுலோகங்களை மாரிபோல் பொழிந்தான். அது முதல் அவனுக்குக் காளிதாஸன் எனப் பெயர் வந்தது. சகல சாஸ்திரங்களையும் உணர்ந்து இரகுவம்சம், மேக சந்தேசம், குமார சம்பவம். சந்திராலோகம், சாகுந்தல நாடகம், விக்கிரமோர் வசீயம், மாளவி காக்னிமித்திரம், முதலிய அனேக நூல்களை மழை போல் வருஷித்தார். அனேக இடங்களில் தேச சஞ்சாரஞ் செய்து, 'கவிசிங்கம்' எனப் பெயர் படைத்து, தாரா நகரத்தில் போஜ ராஜனுடைய அரண்மனையை அடைந்தார். அவன் சமுக வித்துவான்களுள் இவரே தலைமை வாய்ந்தவர். தண்டி, பாணகவி, வீமகவி, பூபதி முதலிய வித்துவான்கள் இவர் காலத்துள்ளவர்கள். இக்கவி வல்லவர் போஜ ராஜனிடம் சமயோசிதமாய்ச் சொல்லிய சுலோகங்களும், பெற்ற வெகுமதிகளும் அளவிலடங்காதவை.

# 9. ஸ்ரீ வித்தியாரணியர்.

---

உலகத்தில் ஞான மார்க்கத்தை உபதேசிக்க அவதரித்த ஸ்ரீ சங்கராசாரியர், இராமானுஜர் முதலிய உத்தமர்களைப் போல், பக்தியை விளக்க வந்த காருண்ய மூர்த்தி வித்தியாரணியர் ஆவார்.

இவர் கி. பி. பதின்மூன்ரும் நூற்ருண்டில், தெலுங்க தேசத்துப் பிராமணராய்ப் பாரத்துவாஜ கோத்திரத்தில் மாயனர் ஸ்ரீமதி என்னும் தம்பதிகளுக்குப் புத்திரராய்ப் பிறந்தார். இவருக்குப் பூர்வ நாமம் மாதவர் என்பதாம். இவருக்குச் சாயனர், சோமநாதர் என இரண்டு தம்பிகள் இருந்தார்கள். இவருடைய தந்தை மாயனர், யாதவகுலத்தரசனுகிய ஸங்கமனுக்கு மந்திரியாயிருந்தார்.

மாதவர் உபநயனம் செய்யப் பெற்று, பன்னிரண்டு வருஷம் குருகுல வாசஞ் செய்து வேத சாஸ்திரங்களைக் கற்றுத் தேர்ச்சியடைந்தார். உலக விவகார ஞானத்திலும் முதிர்ந்தவரானுர். இவர் இளமையில் இலட்சுமி தேவியை உபாசித்தார். அத்தேவி பிரத்தியக்ஷமாகி" நீ சகலகலாவல்லவனுய்ப் புகழும் புண்ணியமும் பெறுவாய், ஆனுல் இந்தப் பிறவியில் செல்வத்தை மாத்திரம் அனுபவிக்க மாட்டாய்" என்று வரந்தந்து மறைந்தாள். அப்பொழுதே இவர் துறவு பூண்டார்.

சந்நியாசம் பெற்றதனுல் ஜென்மம் வேறு

பட்டமையின், இவர் அத்தேவியின் அருளால் நாட்டில் பொன்மாரி பொழியச் செய்து, அப் பொன்னைக் கொண்டு தேவாலயங்கள் கட்டுவித் தார். திருக்குளங்கள் வெட்டுவித்து, மண்டபங் கள் கோபுரங்கள் முதலியவைகளை நிருமித்தார். வித்தியாரணியர் யாதவகுலத்துப் புக்க ராஜனுக்கு மந்திரியாகவும், குலகுருவாகவும் இருந்தார். அப் பொழுது இவர் அநேகம் சிறந்த நூல்களை எழு தினர். கி. பி. 1331-ம் வருஷத்தில் இவர் காசிக் குப் போகும் பொழுது வழியில் சந்தித்த சிங் கேரிபட்டர் என்னும் பிரும்ம ராக்ஷஸைத் தன் புலமையால் வென்றார். பிறகு வியாச முனிவ ரைத் தரிசித்து அம்மகானல் மந்திரோபதேசமும் வித்தியா சங்கரலிங்கமும் அருளப் பெற்ருர். 1332-ம் வருஷத்தில் துங்க பத்திரையின் கரையி லுள்ளதும், ஸ்ரீமத் இராமாயணத்தில் கிஷ்கிந்தை என்று விளங்குவதுமான, ஹம்பி க்ஷேத்திரத்திற் குச் சென்ருர். அங்கு வித்தியா நகரம் என்னும் ஓர் புதிய நகரத்தை அமைப்பதற்கு அஸ்திவாரம் போட்டபிறகு, இலட்சம் பிராமணர்கள் போஜனம் செய்யக் கூடிய ஒரு ஆயிரக்கால் மண்டபத்தை யும் கட்டினர்.

பிறகு மாதவர் சிங்கேரிக்குச் சென்று ஜகத் குரு பாரதி தீர்த்தரை தரிசித்தார். அக்குரு மூர்த்தி மாதவருக்கு முறைப்படி சந்நியாசங் கொடுத்து,

வித்தியாரணியர் என்னும் தீக்ஷா நாமஞ்சூட்டி, ஞானேபதேசம் செய்தார். சின்னுட் கழித்து, அப்பாரதி தீர்த்தருக்குப் பிறகு, வித்தியாரணியர் ஜகத்குரு பீடாதிபதியாய் விளங்கினர். அங்குள்ள சாரதாலயத்திற்குக் கோபுரம் கட்டுவித்து வித்தியாரணிய புரம் எனத் தன் பெயரால் ஓர் அக்கிரகாரத்தையும் நிருமித்தார்.

வித்தியாரணியர். 1336-ம் வருஷத்தில் ஸங்கம ராஜன் புத்திரன் புக்கராஜனுக்குப் பட்டாபிஷேகம் செய்வித்தார். அவனுக்கு ஹரிஹர ராயன் எனப் பெயரிட்டு அந்த இராஜ்யத்தை அளித்தார்.

அவ்வரசனது வேண்டுகோட்கிணங்கித் தாமே சிம்மாசனத்தில் அமர்ந்து இருபத்தாறு வருஷ காலம் நீதி தவருமல் இராஜ்ய பரிபாலனம் செய்தார். தன் ஆட்சிக் காலத்தில் வேற்றரசர்களை வென்று குடிகளிடத்து மிக்க அன்பு காட்டினர். ஏரி வாய்க்கால் முதலியவைகளை வெட்டி வேளாண்மையை விருத்தி செய்தார். கோவில் குளங்களை அமைத்தும், பாடசாலைகளை ஏற்படுத்தியும் ஜனங்களுக்கு நன்மை செய்தார். மீண்டும் விஜய நகர இராஜ்யத்தை ஹரிஹரனுக்கு ஒப்புவித்து அவனுக்குப் பட்டாபிஷேகம் செய்தார். ஹரிஹரன் 1379-ம் வருஷத்தில் பரகதி யடையவே அவன் குமாரன் இரண்டாம் ஹரிஹர ராயன்

1401-ம் வருஷம் முடிய அரசாண்டான். சிறிது காலம் வித்தியாரணியர் அவனிடம் மந்திரியா யிருந்து, மீண்டும் அவன் வேண்டுகோட் கிணங்கி தாமே அரசு புரிந்தார். அப்பொழுது அவர் படைத் தலைமை பூண்டு, கொங்கண தேசத்தை வென்று, அவ்வெற்றிக்கு அடையாளமாக இரு பத்து நான்கு கிராமங்களைப் பண்டிதர்களுக்குத் தானம் செய்தார். விஜய நகரத்தில் சங்கரா சாரிய பீடம் ஒன்றை ஸ்தாபித்து, அதன் சார்பாக எட்டு மடங்களை ஏற்படுத்தி ஒவ்வொன்றிலும் ஒரு துற வியைத் தலைவராக நியமித்தார். அவர்களால் வைதீக ஆசாரங்களை வளர்த்து வந்தார். இவ்வாறு வித்தியாரணியர் அளவிறந்த புண்ணிய கரு மங்களைப் புரிந்து, தமது 119-வது வயதில் ஓர் குகைக்குள் புகுந்து விதேக முக்தி யடைந்தார். இவர் ஆக்கிய நூல்கள் அநேகம். அவற்றுள் சுமார் நூறு நூல்கள் வரையில் இப்பொழுது பயன் பட்டுக் கொண்டிருக்கின்றன.

---

## 10. சுவாமி விவேகானந்தர்.

---

பிள்ளைகளே! உலகத்தில் தர்மம் குறைந்து அதர்மம் மேலிட்டால், அப்பொழுது துஷ்டர் களைக் கொன்று சிஷ்டர்களை இரக்ஷிக்கும் பொ ருட்டு நான் அவதரிக்கிறேன் என்று ஸ்ரீகிருஷ்ண

பகவான் பகவத் கீதையில் சொல்லியிருக்கிறார். இம்மொழியை உண்மைப் படுத்த பகவான் அடிக்கடி அவதார புருஷராய் வந்து ஸாதுக்களைக் காப்பாற்றுகிறார். சைவம், வைஷ்ணவம் முதலிய மதங்கள் மெலிந்த காலங்களில் ஸ்ரீசங்கராசாரியர், ஸ்ரீ இராமனுஜர் முதலிய அவதார புருஷர்கள் தோன்றி மதஸ்தாபனம் செய்து தருமத்தை நிலை நிறுத்தினார்கள்.

இப்படி, உலகமெங்கும் போற்றும் ஸ்ரீ ராம கிருஷ்ண பரம ஹம்சரின் சிஷ்யரான விவேகானந்த சுவாமிகள், 1863-ம் வருஷத்தில், வங்காளத்தில், மிகவும் செல்வாக்குள்ள ஓர் உயர்ந்த *காயஸ்தகுலத்தில் அவதரித்தார். சுவாமிகளின் தந்தையின் பெயர் விசுவநாத தத்தர். அவர் வக்கீல் தொழிலில் மிகவும் கியாதி பெற்றவர். அன்னையின் பெயர் புவனேசுவரி அம்மாள். சகல பாக்கியங்களும் பெற்ற இந்தத் தம்பதிகள், புத்திர பாக்கியம் இல்லாமல் ஈசுவரனை ஆராதித்து, அவரது கடாக்ஷத்தால் பிறந்த சற்புத்திரர் விவேகானந்தர் ஆவார்.

விவேகானந்தர், இளமையிலேயே கல்விகற்க ஆரம்பித்து, தக்க வயதில் கல்கத்தா சர்வகலா சாலையில் B. A., பட்டம் பெற்றார். சங்கீதத்திலும்

* காயஸ்தன் = கணக்கன். தமிழ் நாட்டில் பிராமணர்கள் கல்வி கற்று விளங்குவது போல் வங்காளத்தில் காயஸ்தர்கள் விளங்கினார்கள்.

சித்திரம் எழுதுவதிலும் அவருக்கு அதிகப் பிரியம். கம்பீரமான தோற்றமும், வசீகரமான அழகுமுடைய விவேகானந்தர், ஏழைகளிடத்தில் எப்பொழுதும் அனுதாபம் காட்டி வந்தார். கலாசாலையை விட்டவுடன் பரம்பரையான வக்கீல் தொழிலில் அமர்ந்தார். அது முதலே, மத விசாரணையில் புத்தியைச் செலுத்தி, அக்காலத்தில் கீர்த்தியடைந்திருந்த பிரும்ம சமாஜத்திற் சேர்ந்தார்.

ஞானம் முற்ற முற்ற, ஒருநாள் மத உண்மையை அறியவேண்டும் என்கிற, அவா மேலிட்டு, எல்லா மத ஆசார்யர்களிடத்தும் சென்று "நீங்கள் உபதேசிப்பவை உண்மை என உங்களுக்கு எப்படித் தெரியும்" என்று கேட்டார் "எங்கள் உபதேசம் நூல்களிலிருக்கின்றன" என்று அவர்களனைவரும் சொல்ல, எப்படியாவது உண்மையைக் கண்டறிய வேண்டுமென்று, விவேகானந்தர் ஓர் சற்குருவைத் தேடிச் சென்றார். இறுதியில் வங்காள நாட்டில் தக்ஷிணேசுவரத்திலுள்ள ஸ்ரீ ராமகிருஷ்ண பரமஹம்சர் என்னும் மகானை அடைந்து அவருக்குச் சிஷ்யரானார். பரமஹம்சரைக் கண்டவுடன் விவேகானந்தருடைய சந்தேகமெல்லாம் சூரியனைக் கண்ட பனிபோல் நீங்கிற்று.

1886—ம் வருஷத்தில் பரமஹம்ஸர் பரமபதமடைந்தபின், மற்ற சிஷ்யர்களைச் சந்நியாசம்

பூணும்படி செய்து விவேகானந்தர் அவர்களுக்குத் தலைவராய் விளங்கினார். உலகத்திலுள்ள எல்லா மத நூல்களையும் அவர்கள் படித்து, மத உபந்நியாசங்களைச் செய்து கொண்டு, தனித் தனியே யாத்திரைசெய்தார்கள். விவேகானந்தரோ, அன்னம் கிடைத்தால் சாப்பிட்டும், கிடைக்காத பொழுது உபவாஸ மிருந்தும், இமயமலையைச் சேர்ந்தார். சின்னாட் கழித்துக் கல்கத்தாவிற்கு வந்து அங்கே ஒரு மடம் ஏற்படுத்தினார். மறுபடியும் தேச சஞ்சாரஞ் செய்யப் புறப்பட்டு, பணத்தைக் கையால் தொடாமலும், ஆகாரம் யாசிக்காமலும், நாளைக்கு எங்கு உண்பது, எங்கு உறங்குவது என்று தெரியாமல், உஷ்ண மில்லாத சீதளப் பிரதேசங்களில், கௌபீனம் மாத்திரந்தரித்து, இமயமலைக்கு அப்பாலுள்ள இடங்களில், ஏகாந்தமாய்ச் சஞ்சாரஞ் செய்து, யோகாப்பியாசமும் ஈசுவரத்தியானமும் செய்து வந்தார்.

1892-ம் வருஷம், திருவாங்கூருக்குச் சென்று, பிறகு சென்னைக்கு வந்து, அல்லும் பகலும் ஓயாமல் வேதாந்தத்தின் உயர்வை எடுத்துக் காட்டி, இந்து மதத்தை விட உயர்ந்த மதம் உலகில் இல்லை என்னும் உண்மையை விளக்கினார். இவருடைய பிரசங்கங்களைக் கேட்டு அனேகர் இவருக்குச் சிஷ்யரானார்கள்.

பிறகு அமெரிக்கா தேசத்துச் சிகாகோ நக

ரில் நடந்த சர்வ மத மகா சபைக்கு இந்து மதத்தின் பிரதிநிதியாக, புண்ணிய பூமியென புகழப்படும் பரத கண்டத்தினரால் தேர்ந்தெடுக்கப்பட்டுச் சென்ருர். அச்சமயம் மைசூர் மகாராஜா, இராமநாதபுரம் சேதுபதிராஜா, ஜட்ஜி (Sir) S. சுப்பிரமணிய அய்யர், முதலான அனேக கனவான்கள் செய்த திரவிய சகாயத்தைக் கொண்டு, கப்பலேறி ஜப்பான் மார்க்கமாய் 1893-ம் வருஷம் மேமாதம் சிகாகோவில் போயிறங்கினுர்.

அங்கு கொண்டுபோன திரவிய மெல்லாம் செலவழிந்தும், தனக்கென வாழாத் தன்மையுடைய இந்த அவதார புருஷர் முன்பின் முகமறியாத தூர தேசத்தில் " நான் ஈசுவரனுல் ஏவப்பட்ட கைங்கர்யத்தை முடிப்பதின் பொருட்டு இங்கே வந்திருப்பது சத்தியமானுல், அவரே என்னை இரட்சிக்கட்டும்" என்று அவர் சொன்ன தற்கிணங்க, அவர் பெயரையும் கேட்டிராத அனேகர் அவருக்கு வசமானுர்கள். அவரது நட்பை விரும்பித் தங்கள் வீட்டிற்கு எதிர் கொண்டழைத்து, சுவாமிகளை ஒரு முறையாவது கண்டு அவரது பிரசங்கத்தைக் கேட்டு நற்கதி யடைய வேண்டுமென்று ஆவல் கொண்டார்கள்.

" ஓடும் ஒரு நதியில் இறங்கி ஸ்நானம் பண்ணப் பல துறைகள் இருப்பதுபோல்" எல்லா மதங்களிலும் கடவுள் விளங்குகின்ருர் என்ற

உண்மையை எடுத்துக்காட்டி, இம்மகான் ஒரு அவதார புருஷரோ என்று எல்லோரும் பிரமிக்கும்படி செய்தார். தன் பாண்டித்தியம், அமெரிக்க நிபுணர்களின் கல்வித் தேர்ச்சியை மிஞ்சி நிற்கின்றது என்று அமெரிக்கர்களே கொண்டாடும்படியும், இந்து மதத்தின் உண்மைகளை விவேகானந்தர் விளக்கிக் காட்டினதுபோல் வேறெவரும் சொல்லவில்லை என்று பத்திரிகைகள் புகழும்படியும், சிகாகோ பட்டண வீதிகளில் விவேகானந்தரின் உருவப் படங்கள் மாட்டப்பட்டு அனேகம் ஜனங்கள் பயபக்தியுடன் வணங்குமாறு உருக்கமான அனேகம் அரிய பிரசங்கங்களைச் செய்தார். அவருடைய உபதேசம் பெற்று சந்நியாசம் பூண்டு, அவருக்குச் சிஷ்யரான ஐரோப்பிய ஸ்திரீ புருஷர்கள் அனேகர் இருந்தார்கள். பிறகு நியூயார்க்கு நகரத்தில் வேதாந்த ஸபையை ஸ்தாபித்து விட்டு, இந்தியாவிற்குத் திரும்பி, இந்திய ரனைவராலும் தக்க மரியாதையுடன் வரவேற்கப் பட்டார்.

விவேகானந்தர் மீண்டும் அமெரிக்கா, இங்கிலாந்து, பாரிஸ் முதலிய இடங்களில் அனேகம் அரிய பிரசங்கங்கள் செய்துவிட்டு, சென்ற இடமெல்லாம் சிறப்புற்று இறுதியில் தேக அசௌக்கியத்தால் இந்தியாவிற்குத் திரும்பினர்.

ஆங்கிலேய நாடுகளிலும் அமெரிக்காவிலும்

வேதாந்த விருக்ஷத்தின் விதைகளை ஊன்றி, அந்தத் தேசங்களிலே பரத கண்டத்தின் பெயரையும் கீர்த்தியையும் நிலை நிறுத்தினர்.

இவ்வுலகத்தைத் தன் அரிய பிரசங்கங்களால் ஒரு ஆட்டம் ஆட்டிவைத்த இந்த உத்தம அவதார புருஷர் 1902-ம் வருஷம் ஜூலை மாதம் 2-ந் தேதி பரமபத மடைந்தார்.

"தோன்றிற் புகழோடு தோன்றுக—அஃதிலார்
தோன்றலிற் றோன்றாமை நன்று."

---

## 11. ஐந்தாம் ஜார்ஜ் மகிபர்.

---

"அனைவோர்க்கும் தெய்வம் அரசன்" என்பது நீதி நெறி விளக்கம். அரசனைத் தெய்வத்தின் அம்சமாகப் பாவித்து வணங்குவோர், இந்துக்களாகிய நாமே. இராமர், கிருஷ்ணர், தருமர் முதலிய மகாராஜர்களெல்லாம் தெய்வத்தின் அவதாரம் என்பது எல்லோருக்கும் தெரியும்.

இவ்வளவு பெருமையுடைய நம் இந்து தேசம், நடுவில் பல நாள் அநேகம் சிற்றரசர்கள் வசப்பட்டு, சீர் குலைந்திருந்தது. ஆங்கில அரசாட்சியைப் பெற்ற காலமுதல் நாளுக்கு நாள் பல வகையிலும் திருத்தமடைந்து வருகின்றது.

விக்டோரியா மகாராணியார் நமது தேசத்தை நீண்டநாள் ஆட்சி புரிந்தார். அவர் காலத்தில்

நாம் அடைந்த நன்மைக்கு அளவில்லை. இப்பொழுது நம்மை ஆள்பவர் அவரது அருமைப் பேரராகிய ஐந்தாம் ஜார்ஜ் சக்கரவர்த்தியார். இவர் ஏழாவது எட்வர்ட் சக்கரவர்த்திக்கும், அலெக்ஸாண்டிரா மகாராணிக்கும் 1865-ம் வருஷம் புத்திரராய்ப் பிறந்தார். விக்டோரியா மகாராணிக்கு இவரிடத்தில் மிகுந்த பிரியம் உண்டு. அவ்வம்மையாரின் பழக்க விசேஷத்தால் அவரது உயர் குணங்களெல்லாம் இவருக்கு உண்டாயிற்று.

ஜார்ஜ் அரசர் பால்யமுதல் மிகுந்த தைரியசாலி. நீரில் நீந்துவதிலும், பனிக் கட்டிமேல் நடப்பதிலும் இவருக்கு மிகப் பிரியம். குதிரைச் சவாரி செய்வதிலும், வேட்டையாடுவதிலும் அதிக விருப்பமுடையவர். இவர் எப்பொழுதும் உண்மையே பேசுவார்.

ஜார்ஜ் மன்னர் சிறந்த ஆசிரியரிடம் நான்காவது வயதிலேயே கல்வி கற்க ஆரம்பித்துப் படிப்பில் மிகுந்த விருப்பமும், சுறு சுறுப்பும் உடையவராய் விளங்கினர். இவருக்கு ஞாபக சக்தி அதிகமாகையால், பிரெஞ்சு பாஷையை ஆறே மாதத்தில் கற்றுக் கொண்டார். சிறுவயதிலேயே தமது தமையனர் ஆல்பர்ட் விக்டருடன் சபைகளுக்குப் போய் எந்த விஷயத்தையும் மிகத் தெளிவாகவும், கம்பீர மாகவும் பிரசங்கிப்பார்.

இவர் தமது ஏழாவது வயது முதல் கப்பற்

177333

படைத் தொழில் கற்று வந்தார். அப்பொழுது எல்லோரையும் போல் அதிகாலையில் எழுந்து ஸ்நானம் செய்து, உடுத்துக் கொண்டு சிறிது நேரம் தேகப்பயிற்சி செய்வார். பிறகு போஜனம் செய்துவிட்டு கப்பற் பாடங்களைப் படிப்பார். கப்ப லோட்டும் பரிட்சையில் முதல் தரமாய்த் தேறி 1880-ம் வருஷம் உலகத்தைச் சுற்றி வந்த கப்பலில் இவர் பிரயாணம் செய்தார். அப்பொழுது, தான் கண்ட தேசங்களையும், ஜனங்களின் ஆசாரங்களையும் ஒரு புஸ்தகத்தில் குறித்து வந்தார். இதனாலிவருக்கு உலக ஞானத்தில் அனுபவம் அதிகமாயிற்று. தமது தமையனார் இறக்கவே, தாம் இளவரசு பட்டத்திற்குரியவராகி, அதனால் கப்பல் தொழிலை விட்டு, இராஜாங்க விஷயங்களைக் கற்கத் தொடங்கினார். 1893-ம் வருஷம் மிகவும் உயர்ந்த குணமுள்ள மேரி ராணியாரை மணந்து கொண்டார். இவ்வம்மையார் சங்கீதத்தில் நிபுணர்.

1905-ம் வருஷம் ஜார்ஜ் மன்னர் இளவரசராகத் தமது மனைவியுடன் இந்தியாவிற்கு விஜயஞ் செய்தார். இந்தியர்களால் வரவேற்று உபசரிக்கப் பட்டுப் பல பாகங்களையும் சுற்றி, அவர்கள் இயல்பெல்லாந் தெரிந்து கொண்டு, பிறகு தன் தேசத்திற்குச் சென்றார். தமது பெற்றோர்களிடத்தில் "இந்தியர் சாந்த குணமும் நல்லொழுக்கமுமுடை

யவர். ராஜ விசுவாஸம் மிக்கவர். மத வைராக்கியம் உள்ளவர். அவர்களிடத்தில் அதிக அன்பும் அனுதாபமும் காட்டவேண்டும்'' என்று எடுத்துச்சொன்னார்.

1910-ம் வருஷம் தமது தந்தை இறக்கவே, ஜார்ஜ் மன்னர் சிம்மாஸனம் ஏறி, இராஜ்ஜிய பரிபாலனம் செய்யத் தொடங்கினர். இந்தியாவிலுள்ள விருப்பத்தால் 1911-ம் வருஷம் டிசம்பர் மாதம் 12-ம் தேதி, அன்னை மேரி ராணியுடன் இந்தியாவிற்கு வந்து, அநேகம் சுதேச மன்னர்களையும், கனவான்களையும் வரவழைத்து, டில்லியில் அவர்கள் முன்னிலையில் மகுடாபிஷேகம் செய்து கொண்டார். அந்தத் தினத்தையே நாம் இன்றும் 'தர்பார் தினம்' எனப் பிரதி வருஷமும், டிசம்பர் மாதம், 12-ந் தேதி கொண்டாடுகின்றோம். அது முதல் கல்கத்தாவிலிருந்த ராஜதானி டில்லிக்கு மாற்றப்பட்டது. அப்பொழுது கல்வி விருத்திக்காக ஐம்பது லட்சம் ரூபாய்கள் செலவிட உத்திரவளித்துத் தன் வித்தியாபிமானத்தை விளங்கச் செய்தார்.

நமது சக்கரவர்த்தியாரும் அவர் மனைவியும் ஏழைகளிடத்தில் இரக்கமும், கடவுளிடத்தில் பக்தியுமுள்ளவர்கள். அவர்கள், இந்தியர்கள் உயர் நிலைமையை அடைய வேண்டுமென்ற உள்ளன்புடையவர்கள். அவர்களுக்கு ஐந்து குமாரர்களும்,

ஒரு குமாரத்தியும் இருக்கிறார்கள். பிரின்ஸெஸ் மேரி என்ற இவர்களுடைய அருமைப்புதல்விக்குச் சமீபத்தில் தான் விவாகம் நடந்தது. நமது இள வரசராகிய, மூத்த குமாரருக்குப் பிரின்ஸ் எட்வர்டு என்று பெயர்.

பிள்ளைகளே! "சக்கர நெறி நில்" என்ற ஒள வைப் பிராட்டியின் வாக்குப்படியே நாம் அரசரது ஆணை வழியே நடக்கவேண்டும். நமது அரசரும் அவர் மனைவியும் "நீடுழி வாழ்க" என நாம் வாயார வாழ்த்தவேண்டும்.

---

# 12. அகல்யாபாய்

---

பாலர்களே! சீதை, தமயந்தி, சாவித்திரி, மண் டோதரி, திரௌபதை, தாரை முதலிய ஸ்திரீ ரத் தினங்கள் புகழ் பெற்றிருந்தது நம் இந்தியதேசம். புருஷர்களைப்போல் ஸ்திரீகளிலும் அதிக சாமர்த் தியமும் புத்திசாலித்தனமும் உள்ளவர்கள் அனே கர் இருந்திருக்கிறார்கள் என்பதற்குக் கீழே கண்ட அகல்யாபாய் என்ற ராணியின் சரித்திரம் ஓர் உதா ரணமாகும்.

மஹாராஷ்டிரர்கள் வெகு காலமாக இந்தூர் சமஸ்தானத்தை ஆண்டு வந்தார்கள். அப்படி அரசு புரிந்தவர்களில் ஒருவராகிய மல்ஹாரி ராவ் ஹோல்கார் 1765-ம் வருஷம் மரணமடைய, அவ

ருடைய புத்திரர் கண்டே ராவ் பட்டத்திற்கு வந் தார். அவருக்குச் சகல நற்குணங்களும் பொருந் திய அகல்யாபாய் மனைவியாய் வாய்த்தாள். பால் யத்தில் அகல்யாபாய் நன்ருய்க் கல்வி கற்று, இரா ஜாங்க தர்ம முறைகளையும் படித்திருந்தாள். தெய்வபக்தி, மரியாதை, ஏழைகளிடத்தில் இரக்கம் முதலான அரிய குணங்கள் இம்மாதரசியிடம் அமைந்திருந்தன.

கண்டேராவுக்கும் அகல்யாபாய்க்கும் மல்லி ராவ் என்ற ஓர் புத்திரனும், முக்தா என ஒரு புத்தி ரியும் பிறந்தார்கள். பில்ஸ் என்ற காட்டு ஜாதி யார் ஒரு சமயம் கண்டே ராவைக் கொன்றுவிடவே, மல்லிராவ் இளவரசானுர். அகல்யாபாய் மன வருத்தத்தை வெளிக்காட்டாமல் தெய்வத்தை வணங்கிக்கொண்டும், விரதங்களை அனுஷ்டித்தும் வந்தாள். "பட்டகாலிலே படும், கெட்டகுடியே கெடும்" என்றபடி அகல்யாபாய்க்குத் துக்கத்தின் மேல் துக்கமாக, இளவரசான மல்லிராவும் மரண மடைந்தார். இப்படி எல்லோரும் இறக்கவே அகல்யாபாய் அரசாள வேண்டியிருந்தது.

இம்மாதரசி காலஞ் சென்று சுமார் நூற்றைம் பதுவருஷங்களாகின்றன. ஆனுல் அவள் தனக்கு முன்னும் பின்னும் ஒருவரும் இவ்வளவு நன்ருய் ஆட்சி புரியவில்லை யென்று எல்லோரும் புகழும் படி இராஜ்ஜிய பரிபாலனம் செய்தவளாவாள்.

இந்த ராணியின் காலத்தில் நாட்டிற்குண்டான நன்மைகள் இவ்வளவு என்று சொல்ல முடியாதவை. இராஜ்ஜியத்தை அனேகம் பாகங்களாகப் பிரித்து, நீதி தவருமல் அரசு செலுத்தி, தக்க உத்தியோகஸ்தர்களையும் நியமித்தாள். தர்பாருக்குக்கூடச் சாதாரணமாய் உடுத்து, (கோஷா) முக மூடி இல்லாமல், செல்வாள். அவளிடம் கர்வம், அகம்பாவம், பொருமை முதலிய தீய குணங்கள் இல்லை. குடிகளின் குறைகளைத் தானே நேரில் கேட்டு, தக்க பரிகாரம் செய்தும், சிறிய குற்றங்களுக்குக் கூட பெரிய தண்டனை விதித்தும் வந்தாள். இவ்வாறு செய்ததினுல் துஷ்டர்கள் பயப்பட்டுக் கெட்ட வழியில் பிரவேசிக்காமலிருந்தார்கள். இராஜ்ஜியச் செலவுகளைச் சிக்கனமாய்ச் செய்து ஏராளமான திரவியத்தைத் தருமத்தில் செலவழித்தாள். கிணறு, குளங்களை வெட்டி, சாலைகளை அமைத்து, தருமசத்திரங்களையும், ஆலயங்களையும் கட்டினுள்.

வட இந்தியாவில், கயை என்னும் புண்ணிய க்ஷேத்திரத்தில் விஷ்ணுபாதம் என்ற பிரசித்த ஆலயம் ஒன்று கட்டி, அவ்வாலயச் செலவிற்கு ஏராளமான திரவியம், பூமி முதலியன கொடுத்தாள். இந்த விஷ்ணுபாதம் என்ற இடத்தில், மாதா பிதாவுக்குச் சிரார்த்தம்செய்வது மிகவும்உயர்ந்தது என்று இந்துக்களால் இன்றைக்கும் கொண்டாடப்படுகிறது.

மிருகங்களுக்கு மேயப் பசும்புல் தரைகளும், மிருக வைத்தியத்திற்கு வைத்தியசாலைகளும் ஏற் படுத்தினாள். பட்சிகளை இம்சிக்காமல் அவை களின் தீனிக்காக அனேகம் தான்ய வயல்களை அறுவடை செய்யாமல் விட்டிருந்தாள். அகல் யாபாய் அரசாண்ட முப்பது வருஷகாலமும், இராஜ்யம் செழித்து, ராமராஜ்யம் போல் விளங் கிற்று.

ஒரு சமயம் இந்தூரைச் சேர்ந்த மளியா என்ற கிராமத்தில், சர்கம்தாஸ் என்ற ஒரு பணக் கார வியாபாரி சந்ததியில்லாமல் இறந்தார். அவர் மனைவி ஒரு குழந்தையைச் சுவீகாரம் செய்து கொள்ள நினைத்தாள். ஆனால் அந்தத்தாலு காவைச் சேர்ந்த கலெக்டர், ஆஸ்தி அரண் மனையைச் சேரவேண்டுமென்று, சுவிகாரத்தைத் தடுத்தார். அகல்யாபாய் இதை யறிந்து, கலெக் டரை வரவழைத்துக் கோபித்து, அரண்மனைக்கு ஆஸ்தி வேண்டாமென்று சொல்லி, அவ்விதவை ஒரு குழந்தையைச் சுவீகாரம் செய்து கொள்ள அனுமதி கொடுத்தாள். இதிலிருந்து அம்மாத ரசியின் இரக்கமுள்ள சுபாவம் விளங்குகின்றது.

அகல்யாபாயின் ராஜரீக தந்திரத்திற்கு ஒரு சிறுகதை உண்டு :—

அரண்மனைப் புரோகிதர் கங்காதர யஸ்வந்த் என்றவர், தலைமை பூண்டு ராணியை நீக்க முயலு

கையில், அவரை ஒரு விஷயத்திலும் பிரவே சிக்காதபடி செய்தாள். ரகுபத்தர் என்ற ஒருவரைத் துணை கொண்டு மறுபடியும் அவர் அனேக துஷ்டர்களுடன் 'நீ இந்தச் சமஸ்தானத்தை அரசாள்வது தகுதியல்ல. ஒரு புத்திரனைச் சுவீ காரம் செய்து கொண்டு அவனுக்குப் பதிலாய் ஒருவரை ஆளும்படி செய்யவேண்டும்'' என் றெழுதிய கடிதத்திற்கு "மஹாராஷ்டிர ஸ்திரீயாகிய நான் உங்களைக் கண்டு பயப்படமாட்டேன். உங் களைச் சிறையிலடைக்க உத்தரவு கொடுத்திருக் கிறேன்'' என்றெழுதிவிட்டு அவர்களனைவரையும் சிறையிலடைத்தான். ராணியை மன்னிப்புக் கேட் டுக்கொண்டு "இனி ராஜத்துரோகமான காரியங் கள் ஒன்றும் செய்வதில்லை'' என்று அவர்கள் சொன்னதின்மேல் அவர்களை விடுதலை செய்தாள்.

பிரஜைகளுக்குப் பரம உபகாரியாயிருந்து பல விதத்திலும் அவர்களுக்கு நன்மை செய்த இந்த ராணியார் 1795-ம் வருஷம் காலமாகவே, இந்தியா முழுவதும் துக்கத்தில் ஆழ்ந்தது.

## 13. தாயுமான சுவாமிகள்.

''தண்ணீருங் காவிரியே தார்வேந்தன் சோழனே
மண்ணுவ துஞ்சோழ மண்டலமே'' என்று கவிச் சக்கரவர்த்தியாகிய கம்பர் வாக்குப்படி, புகழ்பெற்ற சோழ நாட்டிலுள்ள திருமறைக்காடு என்னும்

வேதாரணியத்தில், பதினாறுவது நூற்றாண்டில், கேடிலியப்பபிள்ளைஎன ஓர்சைவவேளாளர் இருந் தார். ஈவு, இரக்கம், தயவு, அடக்கம் முதலிய நற்குணங்கள் பொருந்திய இவர், சிவ பக்தி செய்து கொண்டு வேதாரணியத்திலுள்ள சிவா லயத்தின்,மேல் விசாரணையையும் பார்த்துவந்தார்.

இப்படி இருக்கையில், வேதாரணிய பிள்ளை என்ற தன் தமையனார், புத்திர பாக்கியம் இல்லா மல் வருந்துவதைக் கண்டு, அவருக்குத் தன் மைந்தன் சிவசிதம்பரம் பிள்ளையைச் சுவீகாரம் கொடுத்தார். அக்காலத்தில் திருச்சிராப்பள்ளியை இராஜதானியாகக் கொண்டு அரசு செலுத்திய விஜய ரகுநாத சொக்கலிங்க நாயக்கர், கேடிலியப்ப பிள்ளையின் நற்குணங்களைக் கேள்வியுற்று, அவ ரைத் தன்னிடம் வரவழைத்து, ஓர் பெரிய உத்தி யோகத்தில் அமர்த்தினார். பிறகு, கேடிலியப்ப பிள்ளை திருச்சியில் சென்று வசித்துவரும் நாளில், ஈசுவர பக்தி யுள்ளவராதலால் மலைக் கோட்டைத் தாயுமானவரைத் தினமும் தரிசித்து வந்தார். அவ ரருளால் தன் மனைவி கருவுற்று உரிய காலத் தில் ஓர் சற்புத்திரனை அடையும் பாக்கி யத்தைப் பெற்றார். அச்செல்வப் புதல்வருக்குத் தாயுமானவர் எனப்பெயரிட்டு நாளொருமேனியும் பொழுதொரு வண்ணமுமாய் வளர்ந்து வந்தார்.

பாலனும், தக்க வயதில் கல்வி கற்றுத் தமிழ்

ஸம்ஸ்கிருதம் முதலியவைகளில் தேர்ச்சியடைந்து, தேவாரம், திருவாசகம், முதலிய சைவத் திருமுறைகளையும், சைவசித்தாந்த சாஸ்திரங்களையும் படித்துவிட்டு, சாஸ்திர ஆராய்ச்சியும் செய்யத் தொடங்கினர். இப்படித் தாயுமானவர் சிறப்புற்றிருக்கையில் தந்தை கேடிலியப்பபிள்ளை காலஞ்செல்ல, அவருக்குச் செய்யவேண்டிய ஈமக் கடன்களைச் செய்து முடித்தார். ஒருநாள் விஜய ரகுநாத சொக்கலிங்க நாயக்கர் தாயுமானவரை அழைத்து, அவர் சாதுரியமாய்ப் பேசுவதைக் கண்டு வியந்து, பிதா பார்த்து வந்த வேலையை அவரை ஏற்றுக்கொள்ளுமாறு கட்டாயப்படுத்தினர். அவரும் தந்தையைவிட அதிகப்புகழ் பெற்று அவ்வேலையைப் பார்த்தார்.

அப்பொழுது மௌனகுரு தேசிகர் என்னும் சிவ யோகி ஒருவர், சிவஸ்தல யாத்திரை செய்து கொண்டு திரிசிரபுரத்தை அடைந்து, அங்குள்ள சாரமாமுனி மடத்தில் தங்கியிருந்தார். வழக்கப்படி சிவதரிசனம் செய்து வந்த தாயுமானவர், அம்மகானைக் கண்டு வணங்கி, அடியற்ற மரம் போல் அவர் திருப்பாதங்களில் விழுந்து நமஸ்கரித்து, கைகட்டி வாய் பொத்தி, பய பக்தியுடன் எழுந்து நின்றார். அம்மகான் உத்திரவு செய்தபடி திருச்சியிலேயே சிலகாலமிருந்து லௌகீகத் தொழிலை நடத்திவந்தார்.

அப்பால், விஜய ரகுநாத சொக்கலிங்க நாயக்கர், தாயுமானவருடைய குணதிசயங்களைக் கண்டு, அவருடைய நிஷ்டைக்குத் தன்னுலான உதவிகளைச் செய்துகொண்டு, இராஜ்ஜியத்தில் வெறுப்புற்றுச் சில காலம் கழிந்ததும் இறந்துபோனுர். அரசனுடைய கருமங்கள் முடிந்தவுடன், ஸ்தல யாத்திரை செய்ய விருப்பமுற்ற தாயுமானவர், பற்பல இடங்களையும் தரிசித்துக் கொண்டு இராமேசுவரம் சென்று வசித்து வந்தார். இதையறிந்த தமையனுர் சிவசிதம்பரம்பிள்ளை, இராமேசுவரம் போய்த் தாயுமானவரை அழைத்து வந்து பல வந்தப் படுத்தி, அழகில் லட்சுமியையும், கற்பில் அருந்ததியையும் ஒத்த மட்டுவார் குழலம்மை என்னும் ஓர் நற்குலப்பெண்மணியை இவருக்கு விவாகம் செய்து வைத்தார்.

தாயுமானவர் இல்லறம் நடத்தி வரும் நாளில் கனகசபாபதி என்னும் ஓர் ஆண்மகவைப் பெற்று அவர் மனைவி காலஞ் சென்ருள். தனயனை அருமையாய் வளர்த்துக் கல்வியில் முன்னேற்றமடையும்படி செய்தார்.

ஆனுல் சீக்கிரத்தில் இல்வாழ்க்கையை வெறுத்து

“ ஊருஞ் சதமல்ல உற்ருர் சதமல்ல உற்றுப்பெற்ற
பேருஞ் சதமல்ல பெண்டீர் சதமல்ல பிள்ளைகளும்
சீருஞ் சதமல்ல செல்வஞ் சதமல்ல தேசத்திலே
யாருஞ் சதமல்ல நின்ருள் சதம் கச்சியே கம்பனே.”

என்னும் பட்டினத் தடிகளின் வாக்குப்படி பூலோகத்தில் ஒன்றும் சதமல்லவென்றறிந்து தமது புத்திரனையும் செல்வத்தையும் தமையனுரிடம் ஒப்புவித்து, அருளையபிள்ளை என்ற தன் நெருங்கிய பந்துவுடன் தேசசஞ்சாரம் செய்து வரலானுர்.

அப்பொழுது, மௌனகுரு சுவாமிகள் வந்து அவரைத்துறவறம் பூணும்படி ஆஞ்ஞாபிக்கத் தாயுமானவர் அன்றுமுதலே சந்நியாசம் பூண்டு, கௌபீனதாரியாய் வெளிப் பட்டு, காசி, காஞ்சிபுரம், சிதம்பரம், திருவாரூர், மதுரை முதலிய க்ஷேத்திரங்களைத் தரிசித்துக்கொண்டு இராமேசுவரம் சென்ருர். அங்கு அனேக நாளாய் மழையில்லாமல் பரிதபித்த அவ்வூர் ஜனங்களின் வேண்டு கோட் கிணங்கி மழை வருஷிக்கும்படி பரமசிவனைத் துதித்து,

"சைவ சமயஞ் சமயமேனி லச்சமயத்
தெய்வம் பிறைசூடுந் தெய்வமேனி—லைவரைவென்
றுனந்த வின்பி லழுந்துவது முத்தியேனில்
வானங்காள் பெய்ம்மின் மழை."

என்ற திருவெண்பாவைப் பாட, யுகப் பிரளயம் போல் மழை கொட்டிற்று. அவ்வூர் ஜனங்களும் சுவாமிகளிடம் பயபக்தியுடன் நடந்து, அவருக்குத் தொண்டுசெய்து வந்தார்கள்.

பிறகு சேது முதலிய புண்ணிய தீர்த்தங்களில் விதிப்படி ஸ்நானம் செய்து, ஈசுவரனைத் தரிசித்துக்கொண்டு இராமநாதபுரமடைந்தார். அதைச் சேர்ந்த இலட்சுமி நகரம் என்னும் இடத்தில், ஒரு நந்தவனத்தில் இருந்து கொண்டு, தமக்குப் பசித்த பொழுது ஒரு அந்தணர் வீட்டில் பிட்சை வாங்கி உண்டு வந்தார். ஒரு சமயம், பல நாள் நிஷ்டையில் இருக்கையில், கண்டோர் அவர் இறந்ததாக அரசனிடம் கூற, அவனும் உண்மையறியாது "நெருப்பிட்டுக் கொளுத்திடுவீர்" என்று ஆக்ஞாபித்தான். மகானைச் சிதையின் மேல் வைத்துக் கொளுத்தவும், தீச்சுட்டதால் நிஷ்டை கலைந்த தாயுமானவர் நடந்ததை அறிந்து அனைவரையும் மன்னித்துப் பரிபூரண தசையை யடைந்தார்.

இம்மகான் பாடிய பாடல்கள் சுமார் ஆயிரமாகும். தமிழ் தெரிந்த யாவரும் தாயுமானவர் பாடல்களைப் படிக்க மிகவும் ஆசைப்படுவார்கள்.

---

## 14. ராணி சம்யுக்தா.

---

"வானம் பொய்யாது ;
வளம் பிழைப்பறியாது
நீணில வேந்தன் கொற்றம் சிதையாது ;
பத்தினிப் பெண்டிரிருந்த நாடு"

பூர்வ காலத்தில் நம் தேசத்து ஸ்திரீகளும், புருஷர்களைப்போல் கல்வி கேள்விகளில் தேர்ச்சி

யடைந்து மதத்தைக் கைவிடாமல் பாதுகாத்து வந்தார்களென்று ரஜபுத்திர வமிசத்தில் தோன்றிய ராணி சம்யுக்தையின் சரித்திரத்தால் தெரிகின்றது.

திரௌபதை தன் கணவன்மார்களுடன் கானகஞ்சென்று யுதிஷ்டிருடன் இராஜ தருமத்தைப் பற்றி தர்க்கித்ததும், தசரதர் சம்பராஸுரனைக் கொன்ற காலத்தில் கைகேயி சாரத்தியஞ் செய்ததும், சத்தியவான் பொருட்டு யமனுடன் வாதாடி சாவித்திரி கணவனுயிர் பெற்றதும், அர்ச்சுனனுக்குச் சுபத்திரை தேரோட்டியதும், நாடிழந்து, தனமிழந்து, பாலனையிழந்து, புருஷனையும் பிரிந்த சந்திரமதியின் சிறப்பும், சூரியனுதியாமலிருக்கும்படி நளாயினி சபித்ததும், தன் கற்பைச் சோதிக்கவந்த திரிமூர்த்திகளைக் குழந்தைகளாக்கின அனசூயையின் உயர்வும், பாதிக்கிணற்றில் பாத்திரத்தை விட்டோடிவந்த வள்ளுவர் மனைவி வாசுகியின் பெருமையும், புருஷனைக்காட்டில் பிரிந்த தமயந்தி சாமர்த்தியமாய் நளனை அடைந்ததும், மனுநீதி தவறுமல் அல்லியராசாணி இராஜ்ஜியபரிபாலனம் செய்ததும் ஆகிய இவை போன்ற சரித்திரங்களால் நம் தேசத்து ஸ்திரீகளின் சிறப்பு நன்கு விளங்கும்.

வட இந்தியாவிலுள்ள அயோத்தியா நகரத்தில், கானௌஜ் என்னும் பட்டணத்தை

மகா வீரனுகிய ஜயசந்திரன் என்னும் அரசன் ஆண்டுவந்தான். அவனுக்குச் சம்யுக்தை என ஓர் சற்புத்திரி பிறந்தாள். வளர்பிறை சந்திரன் போல் அழகு பொருந்திய சம்யுக்தை, கல்வியில் தேர்ச்சியடைந்து தெய்வ பக்தியுள்ளவளாய் விளங்கினுள்.

அந்நங்கை தக்க பருவமடைந்தபின் ஜயசந்திரன் அவளுக்கு ஒரு சுயம்வரம் ஏற்படுத்திப் பற்பல அரசர்களுக்கும் பத்திரிகை அனுப்பினுன். இதற்கு, டெல்லியை அரசாண்ட பிருதிவி ராஜனைத்தவிர ஏனையரசர்களெல்லோரும் வந்தார்கள். இதனுல் ஜயசந்திரன், பிருதிவி ராஜன்மேல் கோபித்து, அவனை அவமானப்படுத்த எண்ணி, அவனைப்போல் ஒரு பதுமைசெய்து, அதற்கு வேலைக்காரனுடைய உடுப்புக்களைப்போட்டு, சுயம்வர மண்டபத்தின் வாசற்படியில் வைத்தான்.

சம்யுக்தை, சுயம்வர மண்டபத்தையடைந்து ஒவ்வொருவருடைய வீரப் பிரதாபங்களையும் தோழிகளால் தெரிந்துகொண்டு, கடைசியாகப் பிருதிவி ராஜனைப்போலிருக்கும் பதுமையின் கழுத்தில் மாலையைப் போட்டாள். சபையோரனைவரும் "இதென்ன அநியாயம்! என்று சத்தமிட்டார்கள். ஜயசந்திரனுக்குக் கோபமூண்டு, மந்திரிகளை அழைத்துச் சம்யுக்தையைச் சிறையிடச்செய்தான்.

பிருதிவிராஜன், சுயம்வரம் நடந்ததும், தன் பதுமையை வைத்துத் தன்னை அவமானப்படுத்தியதும், சம்யுக்தை மாலைபோட்டதும், அவளைச் சிறையில் வைத்ததும் கேள்வியுற்ருன். உடனே ஜயசந்திரனோடு யுத்தஞ்செய்யப் புறப்பட்டு, கானௌஜ் பட்டணத்தை யடைந்து அவனோடு போர்புரிந்து அவனைத் தோற்கடித்தான். பிறகு ஜயபேரிகையுடன் சம்யுக்தையை அழைத்துக் கொண்டு டெல்லிக்கு வந்து அவளை மணந்து கொண்டான்.

இதையெல்லாம் பார்த்த ஜயசந்திரன் கோபங்கொண்டு, தனக்கு பிருதிவி செய்த அவமானத்தை மறக்காமல் அவனுக்குக் கெடுதல் செய்ய நினைத்தான்.

இப்படியிருக்க, மகம்மதுகோரி என்ற ஒரு மகமதிய அரசன், கொள்ளையடித்தும், கோயில்களை இடித்தும், ஜனங்களைச் சிறையிலிட்டும், ஸ்திரீகளின் கற்பை யழித்தும் வந்தான். பிருதிவிராஜன் (ஜயசந்திரனைத் தவிர) மற்ற அரசர்களோடு சென்று அவனை, டெல்லிக்கு எண்பது மைல் தூரத்திலுள்ள திரௌரி என்ற இடத்தில் தோற்கடித்தான்.

ஜயசந்திரன் பிருதிவியின் வெற்றியைக் கேட்டுப் பெருமையடைந்து மறுபடியும் கோரியை யுத்தத்திற்கழைத்தான்; தான்உதவிபுரிவதாயுஞ்சொன்

ஞன். இத்துடனில்லாமல், அவன் சிற்றரசர் களையெல்லாம் பிரித்துப் பிருதிவிக்கு உதவி செய் யாமலிருக்கும்படியும் செய்தான். 1193-ம் வரு ஷத்தில் கோரி மீண்டும் இந்தியாவின் மேல் படையெடுத்தான். அச்சமயம் சம்யுக்தை மாறு வேஷத்தோடு போர்க்களத்திலிருக்கும் தகப்பனு ரிடஞ்சென்று "பிதா! மகம்மதியர்களுடன் சேர்ந்து தங்கள் தேசத்தை நாசமாக்கி, ஸ்திரீகளின் கற்பை பழித்துக் கோயில்களை இடிக்கலாமா"! என்று கேட்டாள். ஜயசந்திரன் அதற்குக் "காரியம் மிஞ்சிவிட்டது," என்று சொல்லிவிட்டுக் கோரி யிடஞ்சென்றுன். உடனே சம்யுக்தையும், பிருதிவி யிடம் உத்தரவு பெற்றுக்கொண்டு டெல்லிக்குச் சென்று, விரதம் பூண்டு, ஜலபானம் மாத்திரம் செய்து, துறவு கொண்டு மற்ற பெண்டீர்களுடன் ஈசுவரனை ஆராதித்து வந்தாள்.

கோரியும், ஜயசந்திரனும் சேர்ந்து கொண்டு பிருதிவியுடன் கடும் போர் செய்யும்பொழுது, அவன் யுத்தகளத்தில் மாண்டான். தங்கள் அரசரும், புருஷர்களும் மாண்டதைக் கேள்வி யுற்ற மாதர்கள் சம்யுக்தையுள்பட அக்கினிப் பிர வேசம் செய்து உயிர் விட்டார்கள்.

ஜயசந்திரன் சம்யுக்தை இறந்ததைக்கேட்டு மிகவும் துக்கித்தான்.

1194-ம் வருஷத்தில் கோரி திரும்பவும்

படையெடுத்து ஜயசந்திரனைத் தோற்கடித்து அவனையும் கொன்று, அவன் இராஜ்ஜியத்தையும் சேர்த்துக்கொண்டான்.

"கெடுவான் கேடு நினைப்பான்"

# 15. ஔவையார்.

சோழ நாட்டிலுள்ள உறையூரில் வெகு காலத்திற்கு முன் சரஸ்வதியின் அவதாரமாகிய ஔவையார் என்னும் கல்வியிற் சிறந்த பெண் மணி பிறந்தனர். இவரது தாய் தந்தையர்களாகிய ஆதி, பகவன் என்ற இருவரும் செய்து கொண்ட சங்கற்பப்படி குழந்தை பிறந்தவுடன் ஒரு சாவடியில் விட்டுச் சென்றனர். மனத்தாங்கலோடு அன்னை விரும்பிப் பார்க்கையில்:—

"இட்டமுட னென்றலையில் இன்னபடி யென்றெழுதி
விட்டசிவ னுஞ்சேத்து விட்டானோ—முட்டமுட்டப்
பஞ்சமே யானாலும் பாரமவ னுக்கன்னாய்
நெஞ்சமே யஞ்சாதே நீ"

என்ற செய்யுளைக் குழந்தை பாடவும், தாயார் ஏகினாள்.

இவருடன் பிறந்தவர்கள், அதிகமான், கபிலர், திருவள்ளுவர் என்ற மூன்று சகோதரர்களும் உப்பை, உறுவை, வள்ளி என்ற மூன்று சகோதரிகளு மாவார்கள்.

சிறு பிராயமுதல் விநாயகரைப் பூஜித்து அவருடைய அருள் பெற்றதால் இவரது கவிகள் தெய்வத் தன்மை பொருந்தியவைகளா யிருக்கின்றன. இவருடைய கல்வித் திறமையை அறிந்து சேர, சோழ, பாண்டியர் என்ற மூவேந்தர்களும் இவரைக் கௌரவித்து வந்தார்கள்.

ஒரு சமயம் சோழ நாட்டுச் சிலம்பி என்ற, தாசி மேல், கம்பர் என்னும் கவிச் சக்கரவர்த்தி ஐந்நூறு பவுன் பெற்றுக்கொண்டு

“ தண்ணீருங் காவிரியே தார்வேந்தன் சோழனே
மண்ணாவ துஞ்சோழ மண்டலமே ”

என்ற இரண்டு அடிகளை மாத்திரம் பாட அவ்வழியே சென்ற ஔவை, கைக் கூழ் வாங்கிக் கொண்டு :—

—பெண்ணாவாள்

“ அம்பொற் சிலம்பியர விந்தத் தாளணியுஞ்
செம்பொற் சிலம்பே சிலம்பு ”

என்ற பாக்கி இரண்டு அடிகளையும் பாடி முடித்தார். இதனால் இவருக்குக் கூழுக்குப் பாடி என்று ஒரு பெயரும் உண்டு.

கம்பருக்கு உடனே ஔவை மேல் அசூயை உண்டாயிற்று. அம்மாது சிரோமணியை அவமானப் படுத்த எண்ணி ‘ஒரு காலடீ நாலிலைப் பந்த

லடீ' என்று சொல்லி, அதற்குப் பொருள் கேட்டார்.

ஔவையார் கோபங்கொண்டு:—

"எட்டேகா லட்சணமே எமனே றும்பரியே
மட்டில் பெரியம்மை வாகனமே—முட்டமேற்
கூரையில்லா வீடே குலராமன் தூதுவனே
யாரையடா சொன்ன யது"

என்று பாடிக்கம்பரை வெட்க முறச் செய்து, அவர் கேள்விக்கும் 'ஆரைக்கீரை' என்று பதில் சொன்னர்,

மற்றப் புலவர்கள் கல்வித் திறமையையும் பரிட்சிக்கும் சக்தியுடைய இவர், ஒரே இடத்திலில்லாமல், பல விடங்களிலும் சுற்றினர்.

தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கோள்வர் பயன்றெரி வார்"

என்றபடி, பிறர் தினையளவு நன்மை செய்தாலும், அதற்குப் பனையளவு உபகாரம் செய்வார்.

தாய் தந்தையில்லாத ஒரு இடப்பெண், தினைக் கொல்லையைக் காத்துக் கொண்டிருக்கையில் மழையில் நனைந்துசென்ற ஔவையைப் பார்த்து, அன்புடனழைத்து, உணவும், உடையுங்கொடுத்தாள். உடனே ஔவை சேர, சோழ, பாண்டியரை யழைத்து, அப்பெண்ணுக்குச் சிறப்பாய்

விவாகம் செய்வித்துப் பொருளும் கொடுக்கும்படி செய்தார்.

ஒரு சமயம் குலோத்துங்கச் சோழனுக்கு இளவரசு பட்டம் கட்டிய பொழுது அவனை 'வரப்புயர' என்று சொல்லி ஆசீர்வதித்தனர். அவ் வைபவத்திற்கு வந்த ஒருவருக்கும் அதற்குப் பொருள் விளங்கவில்லை அப்பொழுது ஔவையார், 'வரப்புயர நீருயரும், நீருயர நெல்லுயரும், நெல்லுயரக் குடியுயரும், குடியுயரக் கோலுயரும், கோலுயரக் கோனுயர்வான்' என்று விரிவாய் எடுத்துச் சொன்னார்.

சகோதரர்களாகிய இரண்டு வேடர்கள் ஒருவரோடொருவர் சண்டையிட்டு, தங்கள் பலன் தரும் பலாமரத்தை வெட்டிச் சாய்த்து, பிறகு வருத்தப் பட, அவர்கள் வேண்டுகோட்கிணங்கி,

"கூரிய வாளாற் குறைத்திட்ட கூன்பலா
ஓரிதழாய்க் கன்று யுயர்மரமாய்ச்—சீரியதோர்
வண்டுபோற்கோட்டையாய்,வண்காயாய்த்தின்பழமாய்ப்
பண்டுபோ னிற்க பலா"

என்ற செய்யுளைப்பாடி, வெட்டுண்ட மரம் தழைத்துக் காய் கனிகளுண்டாகுமாறு செய்தார்.

பாண்டியராஜன் உத்தரவுப்படி அனேகம் புலவர்கள், பொற்குவியல் நிறைந்து, நான்கு தங்கச் சங்கிலிகள் கட்டித்தொங்கும் ஒரு ஊஞ்சலை, நான்கு செய்யுட்களைப்பாடி அறுக்க முயன்றும் முடியவில்லை.

அப்பொழுது அவ்வழி சென்ற ஔவையார் நான்கு அரிய வெண்பாக்களைப்பாடி, அச்சங்கிலிகள் அறுந்து விழும்படி செய்தார்.

அதிக பசியால் வருந்தி ஒரு சமயம் ஒரு சமுசாரி வீட்டுத் திண்ணையில் படுத்திருந்த ஔவையார், அவனை நோக்கிப் பசிக்குக் கொஞ்சம் கூழ் கேட்டார். அவன் "பெண்ணின் குணமறிவேன், சம்பந்தி வாயறிவேன்" என்றபடி, தன் துஷ்டப் பெண்சாதியிடம் சென்று, அக்கிழவிக்குக் கொடுக்கக் கொஞ்சம் கூழ் வேண்டுமென்று மன்றாடினன். அவள் மிகச்சினந்து ஔவைக்கு அன்னமிட்டாள்.

அப்பொழுது ஔவையார்:—

காணக்கண் கூசுதே கையெடுக்க நாணுதே
மாணுக்க வாய்திறக்க மாட்டாதே—வீணுக்கென்
என்பெல்லாம் பற்றி யெரிகின்றதையையோ
அன்பில்லா ளிட்ட வமுது"

என்று பாடி, அச்சமுசாரியை நோக்கி

பத்தாவுக்கேற்ற பதிவிரதை யுண்டானல்
எத்தாலுங் கூடியிருக்கலாம்—சற்றேனும்
ஏறு மாருக விருப்பளே யாமாயிற்
கூருமற் சன்னியாசங் கோள்"

என்றபடி இம்மனைவியோடு வாழ்வதை விடச் சன்னியாசங் கொள்ளலாம் என்ருர்.

ஒரு நாள் தாகமேற்பட்டு, மாடு மேய்க்கும் பையனாய் வந்து ஒரு நாகமரத்தின் மேலிருந்த சுப்பிரமணியக் கடவுளைப் பார்த்து சில நாகப்பழங்கள் வேண்ட, அவர் 'கிழவியே! சுடும்பழமா, 'சுடாத பழமா' என்று கேட்டார். ஔவையும் 'சுடாத பழம்' என்று சொல்லவே, முருகக்கடவுள் மரக்கிளையை குலுக்கினர். அப்பொழுது கனிந்த பழம், கனியாதவை எல்லாம் விழ, ஔவையார் மணல் ஒட்டியிருந்த பழங்களை ஊத, வேலவன் "சுடாத பழம்கேட்டு, இப்பொழுது ஏன் பாட்டி ஊதுகின்றாய்" என்றார். இதன் உண்மை முன்னுடி யறியாத ஔவை வருத்தமுற்று :—

கருங்காலிக் கட்டைக்குக் நாணாதகோடாலி
இருங்கதலித் தண்டுக்கு நாணும்—பெருங்கானிற்
காரேருமை மேய்க்கின்ற காளைக்கு நான்றோற்ற
தீரிரவுந் துஞ்சா தேன் கண் "

என்ற வெண்பாவைப் பாடவும் ஆறுமுகன் நிஜரூபமெடுத்து அனுக்கிரகித்தார்.

அவர் விரும்பியபடி கொடிது, இனிது, பெரிது, அரிது, என்பவற்றை விளங்கச்செய்து நான்கு அகவல்களைப் பாடினர்.

## பற்பல சமயங்களில் பாடிய தனிப்பாடல்கள்

### வேளூர்ப்பூதன் விருந்திட்டபோழுது அதைப் புகழ்ந்து பாடியது.

" வரகரிசிச் சோறும் வழுதுணங்காய் வாட்டும்
முரமுரெனவே புளித்த மோரும்—திறமுடனே
புல்வேளூர்ப்பூதன் புகழ்ந்து பரிந்திட்டசோ
றெல்லா வுலகும் பெறும் "

ஒரு புலவர் மண்ணைக்கையில் வைத்துக்கொண்டு இதென்ன என்றபொழுது பாடியது.

“ கற்றது கைம்மண்ணளவு கல்லா வுலகளவென்
றுற்ற கலைமடந்தை யோதுகிருள்—மெத்த
வெறும்பந் தயங்கூற வேண்டாம் புலவீர்
எறும்புந்தன் கையாலெண் சாண் ”

இப்படிப் பற்பல சமயங்களில் அனேகம் செய்யுட்களைச் சமயோசிதமாய்ப் பாடிப்புகழ் பெற்றிருக்கிருர்.

இவ்வம்மை இல்லறம் நல்லதென்று பிறருக்குப் போதித்ததேயல்லாமல், தான் ஆயுள் முடிய, விவாகமில்லாம லிருந்தனர். இவர் இருநூற்று நாற்பது வருஷங்களுக்கு அதிகமாய் ஜீவித்திருந்ததாய்த் தெரிகிறது.

இம்மாது சிரோமணி பரம ஏழையாயிருந்தும், இவரிடத்தில் எல்லோருக்கும் மதிப்பும், பயமும் உண்டு. இவர் ஆத்திசூடி, கொன்றைவேந்தன், மூதுரை, நல்வழி, குறள், விநயகாரகவல் முதலிய அனேகம் நூல்களைச் செய்திருக்கின்றுர்.

## 16. தாதாபாய் நௌரோஜி.

சேரர் களாண்டதும் நம்நாடு—நல்ல
சோழர் களாண்டதும் நம்நாடு
நௌரோஜி பிறந்ததும் நம்நாடு—ஐந்தாம்
ஜார்ஜர சாள்வதும் நம்நாடு.

நம் இந்திய தேசத்திற்கு ஒரு திலகம் போல் விளங்கியவரும், இந்திய ஸ்திரீ புருஷர்களின்

க்ஷேமத்திற்கே உழைத்தவருமான தாதாபாய்நௌரோஜி என்னும் உத்தம தேசாபிமானி 1825-ம் வருஷம், பம்பாய் நகரத்தில், ஒரு பாரசீகக் குருக்கள் வமிசத்தில் பிறந்தார். இவருடைய நான்காவது வயதில் பிதா காலஞ்செல்ல, அன்னையால் இரட்சிக்கப்பட்டு, நௌரோஜி கல்வி கற்ருர். இப்பொழுது 'எல்பின்ஸ்டன் காலேஜி என்று கீர்த்தியுடன் விளங்கும் கல்லூரியிலிருந்து, தன் இருபதாவது வயதில் பி. ஏ., பரிட்சையில் தேறி, அனேகம் வெகுமதிகளும் வாங்கினுர். அப்பொழுது பம்பாயில் நீதியதிபராயிருந்த 'ஸர். எர்ஸ்கின் பெர்ரி' என்ற துரை, இவர் சாமர்த்தியத்தைக் கண்டு புகழ்ந்து, நௌரோஜி சீமைக்குப் போய் வக்கீல் தொழிலுக்குப் படிப்பதாயிருந்தால், தான் பாதிச் செலவு கொடுப்பதாய்ச் சொன்னுர். ஆனுல், இவருடைய பந்துக்கள், சீமைக்குப் போய்க் கிறிஸ்துவ மதத்தில் சேர்ந்தால் என் செய்வதென்று பயந்து, அதற்கு அனுமதி கொடுக்கவில்லை.

முதலில் இவர் பம்பாய் கவர்ன்மெண்டில் ஒரு குமஸ்தா வேலை ஒப்புக்கொள்வதாக இருந்தார். ஆனுல், இந்தியரின் நற்காலம் அவரை அவ்வழியில் விடவில்லை. தான் படித்த பள்ளிக்கூடத்திலேயே, உதவி உபாத்தியாயராயிருந்து பிறகு மேல் மேலும் விருத்தியாகி, 1856-ல் அந்த உத்தியோகத்தையும் விட்டார்.

ஸ்திரீகள் அபிவிருத்தி யடைந்தால்தான் தேசம் முன்னேற்ற மடையுமென்றுஇவர் நம்பின படியால், நௌரோஜி வெகு சிரமப்பட்டு அனேகம் பெண் பாடசாலைகளை ஏற்படுத்தினர். பிறகு காமா கம்பெனியென்ற ஒருபண்டகசாலையில்பங்கு எடுத்துக்கொண்டு, அதன்கிளை ஏற்படுத்த சீமைக்குச் சென்றார். அப்பொழுது சீமையில் இந்தியர் படுங் கஷ்டங்களைக்கண்டு சகிக்காமல், ஆங்கிலேயரிடம் எடுத்துச்சொன்னர்.

1855 முதல் (I.C.S.) ஐ.ஸி.எஸ். உத்தியோகத்திற்குச் சர்க்கார், நபர்களைத் தேர்ந்தெடுக்காமல் பரிட்சை நடத்தித் தேறியவர்களுக்கு வேலை கொடுக்கத் தீர்மானித்தார்கள். நௌரோஜி, கஷ்டப்பட்டு, இந்தியர்களும் அப்பரிட்சைக்குப்போக ஏற்பாடு செய்தார்.

சீமையிலிருக்கும் பொழுது 'லண்டன் இந்தியர் சங்கம்' 'ஈஸ்ட் இந்தியர் சங்கம்' முதலிய சங்கங்களை ஏற்படுத்தி, இந்தியர்களின் முன்னேற்றத்தை விரும்புகிறவர்களனைவரையும், அவைகளின் அங்கத்தினர்களாய்ச் சேர்த்தார். சுய ஆட்சியைப்பற்றி ஒரு பத்திரிகையும் நடத்தலானர்.

1862-ல் இவர், காமா கம்பெனியினின்றும் விலகி, தானே சொந்த வியாபாரஞ் செய்தார். அப்பொழுது சினேகித ரொருவரால், இவருக்குப் பெருத்த நஷ்டம் ஏற்பட்டது. தனக்கேற்பட்ட

கடன்களைக் கொடுத்துவிட்டு, இந்தியாவுக்குத் திரும்பினர். அச்சமயம் அனேகம் கனவான்கள் அவரை வரவேற்று உபசரித்தார்கள்.

மறுபடியும் சீமைக்குச்சென்று 'வாக்கெட் கமிட்டியின்' முன் இந்தியர்களின் ஏழ்மைத்தனத்தையும், அவர்களுடைய துன்பங்களையும் எடுத்துச் சொன்னர். பிறகு 1874-ல் இந்தியாவை யடைந்து சீர்கெட்டுக்கிடந்த பரோடா சமஸ்தானத்தில் இரண்டு வருஷம் திவான் பதவியிலிருந்து, அனேகம் திருத்தங்களைச் செய்தார்.

1885- முடிய பம்பாய் முனிஸிபல் சபை அங்கத்தினராக அமர்ந்து பொதுஜன நன்மைக்காக உழைத்தார். அப்பொழுது பம்பாய் கவர்னரான லார்ட்டு ரேயின் வேண்டுகோட்கிணங்கி, இரண்டு வருஷம் சட்டசபை அங்கத்தினராக இருந்தார். 1886-ல், முதல் "காங்கிரஸ்' மகா சபைக்கு இவரே அக்கிராசனம் வகித்தார். 1887-ல் 'பப்ளிக் சர்விஸ் கமிஷன்' முன் சாட்சியங்கூறி பல உண்மைகளை எடுத்துச்சொன்னர். 1887-1906 இவ்விரண்டு வருஷங்களிலும் நடந்த காங்கிரஸுக்கும் இவரே அக்கிராசனம் வகித்தார். மறுபடியும் சீமைக்குச் சென்றுலண்டன்மா நகரத்திலுள்ள காமன்ஸ்சபையில், முதல் இந்திய மெம்பராகத் தேர்ந்தெடுக்கப்பட்டார்.

1916-ல் பம்பாயில் கவர்னராயிருந்த 'லார்டு

வில்லிங்டன்' பிரபு அக்கிராசனம் வகித்து, இவருக்குப் பம்பாய் யுனிவர்ஸிடியாரால் கொடுக்கப்பட்ட (L.L.B) எல்.எல்.பி. பட்டத்தைக் கொடுத்தார்.

இப்படிப் பிறந்தது முதல் இறக்கும் வரையில் அனேகம் நன்மைகளைச்செய்து 1917-ம் வருஷம், தனது 92-வது வயதில் இந்திய மாதா ஒரு உத்தம புத்திரனை இழந்தாளென்று அனைவரும் துக்கப்படுமாறு, பரிசுத்த குணங்களுடைய, இந்த உத்தம தேசாபிமானி காலஞ்சென்றார்.

---

## 17. மஹாதேவ கோவிந்தரானடே.

---

மகாதேவ கோவிந்த ரானடே 1842-ம் வருஷத்தில் ஒரு சாதாரண மஹாராஷ்டிர வமிசத்தில் பிறந்தார். இவருடைய முன்னோர்கள் மஹாராஷ்டிர தேசத்தை ஆண்டு வந்த பீஷ்வாக்களிடம் அரண்மனை உத்தியோகத்தில் அமர்ந்திருந்தனர். ரானடே பாலியத்தில் திண்ணைப் பள்ளிக்கூடத்தில் படித்து, மஹாராஷ்டிர பாஷையைக் கற்றுக்கொண்டார். பிறகு கோல்காப்பூரிலுள்ள ஒரு பாடசாலையில் ஆங்கிலம் கற்று, அது முடிந்ததும் பம்பாயிலுள்ள எல்பின்ஸ்டன் கல்லூரியில் சேர்ந்து, 1862-ல் B.A. பரீட்சையில் முதல் வகுப்பில் தேறினர். இவருடைய புத்திசாலித்தனத்துக்

காக கலாசாலை அதிகாரிகள் இவருக்கு ஒரு பொற் பதக்கத்தைப் பரிசாக அளித்தார்கள்.

ரானடே ஒரு நிமிஷங்கூட வீண்பொழுது போக்காமல், ஓய்வு நாட்களில், புத்தக சாலைகளுக் குச் சென்று அங்குள்ள புத்தகங்களை ஆவலாய்ப் படித்துவந்தார். M.A. பரீட்சையில் தேறின பிறகு வித்யா இலாகாவில் (Translator) மொழி பெயர்ப்பு உத்தியோகஸ்தராகவும், பிறகு கோல்காப்பூர் இராஜ்ஜியத்தில் நியாயாதிபதியாகவும் வேலை பார்த்தார். பின்னர், தாம் படித்த கலாசாலையில் ஆங்கில போதகாசிரியராகவும், பம்பாய் நீதிஸ்த லத்தில் தீர்ப்புகளைப் பதிவுசெய்யும் உத்தியோகங் களிலும் அமர்ந்திருந்தார். மேன்மேலும் உயர்ந்த பதவிகளையடைந்து, இறுதியில் பம்பாய் ஹை கோர்ட்டு ஜட்ஜானூர். அப்பொழுது வழக்குக ளைப் பொறுமையாக விசாரித்துப் பக்ஷபாத மில் லாமல் தீர்ப்புச்செய்து வந்தார்.

பொது ஜனங்களின் க்ஷேமத்தையே எண் ணித் தமக்குக்கிடைத்த உயர்ந்த பதவி உலகத்தா ருக்கு உதவி செய்வதற்கே என்று எண்ணிய பெரி யவர்களில் இவரொருவராவர். இவர் தமது நாட்டிற்குச்செய்த நன்மைகள் அனேகம் இருக் கின்றன. முன்னேற்ற மடைந்திருக்கும் ஒவ் வொரு தேசமும் தாய்ப்பாஷையை விருத்தி செய்து வருகின்றதைத் தெரிந்து, தாமும் மஹா

ராஷ்டிர பாஷையை நன்ருய்ப்படித்து, ஆங்கிலத்திலுள்ள நூதனமான விஷயங்களை மஹாராஷ்டிரத்தில் மொழி பெயர்த்தார். அனேக பத்திரிகைகளுக்கு இடைவிடாது வியாஸங்கள் எழுதிவந்தார். கல்வி ஆலோசனைச் சங்கத்தில் ஓர் அங்கத்தினராக இருந்து தம்மாலியன்ற அளவு உதவி புரிந்தார். இவருக்கு L.L.B., பட்டமும்' அளிக்கப்பட்டது.

இந்திய காங்கிரஸ் சபையிலும் ஓர் அங்கத்தினராக இருந்து அனேக வருஷகாலம் தேசத்தின் நன்மைக்காகப் பாடுபட்டார். ஜனசமூகச் சீர்திருத்தங்களைச் செய்ய ஒரு சபையை ஏற்படுத்தி அதன் காரியதரிசியாக இருந்தார். நம்மிடத்தில் குடிகொண்டு, நம்மை வறுமையில் ஆழ்த்தும் கொடிய பழக்கங்களைக் கண்டித்து, பால்ய விவாகம், விவாகத்தில் வீண்செலவு செய்தல், கப்பலேறி அயல்நாடுகளுக்குப் பிரயாணம் செய்யக்கூடாதென்ற நிபந்தனைகள் முதலியவற்றை விலக்கப் பாடுபட்டார்.

நம் நாடு விவசாயத்தினுல் மாத்திரம் முன்னேற்ற மடையாது, கைத்தொழிலிலும் விருத்தியாக வேண்டுமென்று வற்புறுத்தினுர். அயல் நாட்டு நாகரீகம், கைத்தொழில் முறைகள், முதலியவற்றைத் தெரிந்துகொள்ள நம் நாட்டினர்

களை அங்கே அனுப்ப முயற்சிசெய்தார். அனேக இடங்களில் கூட்டுறவுச் சங்கங்களை ஸ்தாபித்தார்.

ரானடே, சாமான்னிய குடும்பத்தில் பிறந்து, இவ்வளவு உன்னத பதவியை அடைந்ததற்குக் காரணம், அவர் பாலியத்தில் வீண்பொழுது போக்காமல் தன் வேலையையே கவனித்ததால் தான் என்று நன்கு தெரியும். இவருடைய குற்றமற்ற நடத்தையையும், பிரியமான வசனங்களையும், சிறந்த ஈசுவர பக்தியையுங்கண்டு அவரை ஒரு ரிஷியென்றே சொல்லுவார்கள். இவரது உத்தம நன்னடக்கையே இவருடைய உயர்ந்த பதவிக்குக் காரணமாயிருந்தது.

இவர் 1901-ம் வருஷம் ஜனவரி மாதம் 16-ந் தேதி காலஞ்சென்ருர். இவர் ஞாபகார்த்தமாக ஒரு கைத்தொழிற் கலாசாலை ஏற்படுத்தப்பட்டது. இவருடைய முக்கிய சிஷ்யர், நீங்கள் இதற்கு முன் மலரில் படித்திருக்கும் கோபால கிருஷ்ண கோகலே யாவர். அவரும் இப்பெரியாரைப்போல் நற்குணங்கள் அமையப்பெற்றவர். தேசசேவை செய்வதில் குன்ருத ஊக்கமுள்ளவர்.



# 5-ஆவது வகுப்பு.

## I. (a) ஸ்தோத்திரப் பாடல்கள்.

### 1. விநாயகர்.

சீதக் களபச் செந்தா மரைப்பூம்
பாதச் சிலம்பு பலவிசை பாடப்
பொன்னரை ஞாணும் பூந்துகி லாடையும்
வண்ண மருங்கில் வளர்ந்தழ கெறிப்பப்
பேழை வயிறும் பெரும்பாரக் கோடும்
வேழ முகமும் விளங்குசிந் தூரமும்
அஞ்சுகரமும் அங்குச பாசமும்
நெஞ்சிற் குடிகொண்ட நீல மேனியும்
*நான்ற வாயும் நாலிரு புயமும்
மூன்று கண்ணும் மும்மதச் சுவடும்
இரண்டு செவியும் இலங்கு பொன் முடியும்
திரண்டமுப் புரிநூல் திகழொளி மார்பும்
அற்புதநின்ற கற்பகக் களிறே!
தத்துவ நிலையைத் தந்தெனை யாண்ட
வித்தக விநாயக! விரைகழல் சரணே.

### 2. சரஸ்வதி.

† தாவறு முலகெலாந் தந்த நான்முகத்
‡ தேவுதன் றுணைவியாய்ச் செறிந்த பல்லுயிர்

---

*நான்ற—தொங்கின; †தாவறு—குற்றம் அற்ற; ‡தேவு—கடவுள்.

நாவுதோ றிருந்தருள் நலங்கொள் வாணிதன்
பூவடி முடிமிசைப் புனைந்து போற்றுவாம்.

## 3. சுப்பிரமணியர்.

(1) கருவினுரு வாகிவந்து வயதளவி லேவளர்ந்து
கலைகள் பலவே தெரிந்து மதனாலே
கரியகுழல் மாதர்தங்கள் அடிசுவடு மார்புதைந்து
கவலை பெரிதாகி நொந்து மிகவாடி
அரகரசி வாயவென்று தினமுநினை யாமல்நின்று
அறுசமய நீதியொன்றும் அறியாமல்
*அசனமிடு வார்கள் தங்கள் மனைகள்தலை வாசல்நின்று
அனுதினமும் நாணமின்றி அலைவேனோ
உரகபட மேல்வளர்ந்த பெரியபெரு மாள் அரங்கர்
உலகளவும் மால்மகிழ்ந்த மருகோனே!
உபயகுல தீபவங்க விருதுகவி ராஜசிங்கம்
உறைபுகலி யூரிலன்று வருவோனே!
பரவைமனை மீதிலன்று ஒரு பொழுது தூதுசென்ற
பரமனரு ளால் வளர்ந்த குமரோனே!
பகையசுரர் சேனை கொன்று அமரர்சிறை மீளவென்று
பழனிமலை மீதில்நின்ற பெருமாளே.

(2) பாதிமதிநதி போதுமணிசடை நாதனருளிய குமரேசா!
பாகுகனிமொழி மாதுகுறமகள் பாதம்வருடிய மணவாளா!
காதுமொருவிழி காகமுறவருள் மாயனதுதிரு மருகோனே!
காலனெனையணு காமலுனதிரு காலில்வழிபட அருள்வாயே!
ஆதியயனொடு தேவர்சுரருல காளும் வகைதரு சிறைமீளா!
ஆடுமயிலினில் ஏறியமரர்கள் சூழவலம்வரும் இளையோனே!
†சூதமிகவளர் சோலைமருவு சுவாமிமலைதனில் உறைவோனே!
சூரனுடலற ‡ வாரிசுவறிட வேலைவிடவல பெருமாளே!

---

*அசனம்—ஆகாரம்; †சூதம்—மாமரம்; ‡வாரி—கடல்.

பொது.

1. மற்றுப்பற்றெனக் கின்றிநின்றிருப் பாதமே
மனம் பாவித்தேன் ;
பெற்றலும்பிறந் தேனினிப்பிற வாததன்மை
வந் தெய்தினேன் ;
கற்றவர்தொழு தேத்துஞ் சீர்க்கரை யூரிற்
பாண்டிக் கொடுமுடி
நற்றவா ! உனை நான்மறக்கினும் சொல்லும்நா
நமச்சிவாயவே. —(தேவாரம்)

2. கற்றவர் விழுங்கும் கற்பகக் கனியைக்
கரையிலாக் கருணைமாக் கடலை
மற்றவ ரறியா மாணிக்க மலையை
மதிப்பவர் மன்மணி விளக்கை
செற்றவர் புரங்கள் செற்ற எம்சிவனைத்
திருவீழி மிழலைவீற் றிருக்கும்
கொற்றவன் றன்னைக் கண்டுகண் டுள்ளம்
குளிர என்கண்குளிர்ந் தனவே.—(திருவிசைப்பா)

3. உலகம் யாவையும் தாமுள ஆக்கலும்
நிலைநி றுத்தலும் நீக்கலும் நீங்கலா
அலகி லாவிளை யாட்டுடை யான் அவன்
தலைவன் ; அன்னவற்கே சரணங்களே.
—(கம்பராமாயணம்)

4. அறக் கடல் நீயே அருட்கடல் நீயே
அருங்கரு ணாகரன் நீயே
திறக்கடல் நீயே திருக்கடல்நீயே
திருந்துளம் ஒளிபட ஞான
நிறக்கடல் நீயே நிகர்கடந் துலகில்
நிலையும்நீ உயிரும்நீ நிலைநான்

பெறக்கடல்நீயே தாயும்நீ எனக்குப்
பிதாவும்நீ அனைத்தும் நீயன்றோ?—(தேம்பாவாணி)

5. அங்கிங் கெனாதபடி எங்கும்ப்ர காசமாய்
ஆனந்த பூர்த்தி யாகி
அருளொடு நிறைந்ததெது ; தன்னருள்வெளிக்குளே
அகிலாண்ட கோடி எல்லாம்
தங்கும் படிக்கிச்சை வைத்துயிர்க் குயிராய்த்
தழைத்ததெது, மனவாக்கினில்
தட்டாமல் நின்றதெது ! சமயகோ டிகளெலாம்
தந்தெய்வம் எந்தெய்வ மென் (று)
எங்குந்தொடர்ந்தெதிர் வழக்கிடவும் நின்றதெது ;
எங்கணும் பெருவழக் காய்
யாதினும் வல்லவொரு சித்தாகி இன்பமாய்
என்றைக்கும் உள்ளதெது ; மேல்
கங்குல்பகலறநின்ற எல்லையுளதெது; அது
கருத்திற்கிசைந்த ததுவே.
கண்டனவெலா மோன வுருவெளிய தாகவும்
கருதியஞ்சலி செய்குவாம். —(தாயுமானர்)

6. தனித்தனிமுக் கனிபிழிந்து வடித்தொன்றாய்க் கூட்டி
சர்க்கரையும் கற்கண்டின் பொடியுமிகக் கலந்தே
தனித்தநறுந் தேன்பெய்துபசும்பாலும் தெங்கின்
தனிப்பாலும் சேர்த்தொரு தீம்பருப் பிடியும் விரவி
இனித்தநறு நெய்யளைந்தே இளஞ்சூட்டில் இறக்கி
எடுத்தசுவைக் கட்டியிலும் இனித்திடுந்தெள்ளமுதே !
அநித்தமறத் திருப்பொதுவில் விளங்கும்நடத் தரசே !
அடிமலர்க்கென் சொல்லணியாம் அலங்கலணிந்தருளே
—(திருவருட்பா.)

7. ஆரா வமுதே! அரசே! ஆநந்தவெள்ளப்
பேராறே! மோனப் பெருக்கே! பராபரமே!

8. சிந்தித்த வெல்லாமென் சிந்தையறிந் தேயுதவ
வந்த கருணை மழையே! பராபரமே!

9. அன்பைப் பெருக்கி யெனதாருயிரைக் காக்கவந்த
இன்பப பெருக்கே! இறையே! பராபரமே! (நெஞ்சம்

10. எண்ணாத வெண்ணமெலாம் எண்ணியெண்ணி யேழை
புண்ணாகச் செய்ததினிப் போதும் பராபரமே!

11. பாராயோ என்னைமுகம் பார்த்தொருகா லென்கவலை
தீராயோ வாய்திறந்து செப்பாய் பராபரமமே!

(தாயுமானார்)

---

## I. (b) தேசாபிமானப் பாடல்கள்.

### கும்மி மெட்டு.

1. ஓங்கும் இமாசலம் ஒளிர் முடியாம்; எங்கும்
உலவு பலநதி மாலைகளாம்;
தாங்கும் இக்கோலம் தழைக்கும் இந்தியத்
தாயே! உமக்கு நமஸ்காரம்.

2. கண்டங்களெங்கும் காணும் நற்காட்சிகள்
கலந்து தன்னுள்ளே காட்டுதலால்
அண்டமெங்கும் இல்லா அருமை இந்திய
அன்னை! உனக்கு நமஸ்காரம்.

3. நீர்வளமும் காட்டின் நீள்வளமும் மலை
நேர்வளமும் நகர் சாரும் சிறப்புச்
சீர்வளமும் மிகத் திகழும் இந்தியச்
செல்வி! உனக்கு நமஸ்காரம்.

4. மன்னனைத் தெய்வமாக் குடிகளும், மன்னவன்
மன்னுயிர் தன்னுயிர் ஆகவுமே
மதித்து வரும் பெரு மாண்புசேர் இந்திய
மாதா ! உனக்கு நமஸ்காரம்.

5. ஞால மெங்கும் வெகுகாலமாக நல்ல
நாகரிகக் குறியாக உயர்
சீலமும் ஞானமும் சிறக்கும் பாரத
தேவி ! உனக்கு நமஸ்காரம்.

"பாராயோ என்னை முகம்" என்ற மெட்டு.

1. மன்னவரில் ராமன் மனுவோ டரிச்சந்திரன்
இன்னவர் நற்கீர்த்தி இசைந்த பெருநாடிதுவே.

2. பின்னரும் அசோகர் அக்பர் சிவாஜியோடு
நன்னய விக்டோரியா நாட்டம்வைத்த நாடிதுவே.

3. மங்கையரில் சந்திரமதி சீதை தமயந்தி
இங்கிவர் பேர் என்றும் இலங்கும் நன்னாடிதுவே.

4. பாலரில் மார்க்கண்டன் பரதன் அபிமன் சீர்
சாலும் துருவனிவர்தாம் விளங்கும் நாடிதுவே.

இங்கிலீஷ் நோட்டு—மெட்டு.

எங்கள் தெய்வத் திருநாடு—உல
கெங்குங் ஒளிசெய் திருநாடு
பங்கஜம் மலரும் திருநாடு—பல
பங்கமில் காட்சித் திருநாடு
தங்கும் தருமத் திருநாடு—சாது
சங்கம் தழைக்கும் திருநாடு
பொங்கும் கலைசேர் திருநாடு—இதைப்
போற்றித் தினமும் மனம் நாடு.

அறுசீர் விருத்தம்.

சிந்தை நல்லருளால் ஈசன் சேர்பவர்க் குதவும் வண்ணம்
வந்துறு மன்னர் இந்து மகமது கிறிஸ்து ஆதி
எந்தநன் மதத்தாரேனும் இசைந்தவர்க் காட்சி நல்கும்
இந்தியத்தேவி பாதம் என்றுநாம் வணங்கி வாழ்வாம்.

ஆநந்தக்களிப்பு.

வாழிய பாரத தேவி—என்றும்
வாழி அவள் புகழ் மகிதலம் மேவி (வாழிய)
வாழி நம்முள் தேச பக்தி—நாளும்
வாழி அதனுடன் நம்ராஜ பக்தி (வாழிய)
வாழி ஜார்ஜ் மன்னவர் வாழி—மிக
வாழி அரசியல் வழிவழி வாழி. (வாழிய)

---

## II. (a) வியாசம்.

---

பொது அறிவில் சொல்லப்பட்ட விஷயங்களைப் பற்றிச் சிறு வியாசங்கள்; சொந்த பாஷையிலெழுதலும், சுருக்கியெழுதலும், அடியிற் கண்ட கதைகளும்.

1. சுந்தரமூர்த்தி ஸ்வாமிகள்
2. குலசேகராழ்வார்
3. ஐந்தாம் ஜார்ஜ் மகிபர்
4. காளிதாஸர்
5. சங்கராச்சாரியர்
6. பட்டினத்தடிகள்
7. வித்தியாரண்யர்
8. புகழேந்திப்புலவர்
9. ராணி சம்யுக்தை
10. அகல்யா பாய்
11. ஸ்வாமி விவேகாநந்தர்
12. தாதாபாய் நௌரோஜி
13. மகாதேவகோவிந்தராநடே
14. பச்சையப்ப முதலியார்
15. ஆறுமுக நாவலர்

இத்தகைய பல பெரியோர் சரிதை.

## II. (b) இலக்கணம்.

IV வகுப்பிற் சொன்னதை விஸ்தரித்தல்—பெயரெச்சம், வினை யெச்சம்; வாக்கிய அமைப்பும் மாற்றலும்.

---

## III. செய்யுட்பாடம் :—குறள்.

1. தனக்குவமை யில்லாதான் றாள்சேர்ந்தார்க் கல்லால்
மனக்கவலை மாற்றலரிது.

2. அருளிலார்க் கவ்வுலக மில்லை; பொருளிலார்க்
கிவ்வுலக *மில்லாகி யாங்கு.

3. செல்வத்துட் செல்வம் செவிச் செல்வம்; அச்செல்வம்
செல்வத்து ளெல்லாந் தலை.

4. இன்னா செய்தாரை யொருத்தல் அவர் நாண
நன்னயஞ் செய்து விடல்.

5. தன்னெஞ் சறிவது பொய்யற்க; பொய்த்த பின்
தன்னெஞ்சே தன்னைச் சுடும்.

6. அடக்கம் அமரருள் உய்க்கும்; அடங்காமை
ஆரிருள் உய்த்து விடும்.

7. தீயினாற் சுட்டபுண் உள்ளாறும்; ஆறாதே
நாவினாற் சுட்ட வடு.

8. தினைத்துணை நன்றி செயினும் பனைத்துணையாக்
கொள்வர் பயன்றெரி வார்.

9. சொல்லுதல் யார்க்கும் எளிய; அரியவாம்
சொல்லிய வண்ணம் செயல்.

10. †உடுக்கை யிழந்தவன் கைபோல ஆங்கே
இடுக்கண் களைவதாம் நட்பு.

---

* இல்லாகி யாங்கு—இல்லையானாற் போல.

† உடுக்கை—உடை.

11. எல்லா விளக்கும் விளக்கல்ல ; சான்றோர்க்குப்
பொய்யா விளக்கே விளக்கு.

12. எண்ணித் துணிக கருமம் துணிந்த பின்
எண் ணுவம் என்ப திழுக்கு.

நாலடியார்.

1. குஞ்சி யழகும் *கொடுந் †தானை கோட்டழகும்
மஞ்ச ளழகும் அழகல்ல—நெஞ்சத்து
நல்லம்யா மென்னும் நடுவு நிலைமையால்
கல்வி யழகே அழகு.

2. கல்வி கரையில ; கற்பவர் நாள் சில ;
மெல்ல நினைக்கிற் பிணிபல ; தெள்ளிதின்
ஆராய்ந் தமைவுடைய ‡கற்பவே நீ ரொழியப்
பாலுண் ¶குருகிற் றெரிந்து.

3. களர் நிலத் துப்பிறந்த வுப்பினைச் சான்றோர்
விளைநிலத்து நெல்லின் விழுமிதாக் கொள்வர் ;
கடைநிலத்தோ ராயினும் கற்றறிந் தோரைத்
தலைநிலத்து வைக்கப் படும்.

4. முன்னரே சாநாள் முனிதக்க மூப்புள ;
பின்னரும் பீடழிக்கும் நோயுள ;—§கொன்னே
பரவன்மின் பற்றன்மின் $பாத்துண்மின் யாதும்
கரவன்மின் கைத்துண்டாம் போழ்து.

5. நன்னிலைக்கண் தன்னை நிறுப்பானும் தன்னை
நிலைகலக்கிக் கீழிடு வானும் நிலையினும்
மேன்மே லுயர்த்து நிறுப்பானும் தன்னைத்
தலையாகச் செய்வானுந் தான்.

---

* கொடும்—வளைந்த; † தானை—ஆடை; ‡ கற்ப—கற்பார்;
¶ குருகு—நீர்ப்பறவை; § கொன்னே-வீணாக; $ பாத்து-பகுத்து.

6. புத்தகமே சாலத் தொகுத்தும் பொருள்தெரியார்
உய்த்தக மெல்லாம் நிரப்பினும்—மற்றவற்றைப்
போற்றும் புலவரும் வேறே; பொருள் தெரிந்து
தேற்றும் புலவரும் வேறு.

7. கூர்த்துநாய் கௌவிக் கொளக்கண்டும் தம்வாயால்
பேர்த்துநாய் கௌவினா ரீங்கில்லை—*நீர்த்தன்றிக்
கீழ்மக்கள் கீழாய சொல்லியக்கால் சொல்பவோ
மேன்மக்கள் தம் வாயால் மீட்டு.

8. நல்ல குலமென்றும் தீய குலமென்றும்
சொல்லள வல்லால் பொருளில்லை— தொல்சிறப்பின்
ஒண்பொரு ளொன்றோ? தவம்கல்வி ஆள்வினை
என்றிவற்றா லாகுங் குலம்.

9. ஆவே றுருவின வாயினும் ஆபயந்த
பால்வே றுருவின வல்லவாம்—பால்போல்
ஒருதன்மைத் தாகும் அறம்; நெறி ஆபோல்
உருவு பலகொள லீங்கு.

10. நல்லா ரெனத்தாம் நனிவிரும்பிக் கொண்டாரை
அல்லா ரெனினும் அடக்கிக் கொளல்வேண்டும்
நெல்லுக் குமியுண்டு; நீர்க்கு நுரையுண்டு;
†புல்லிதழ் பூவிற்கு முண்டு.

பழமொழி.

1. பொல்லாத சொல்லி மறைந்தொழுகும் பேதை தன்
சொல்லாலே தன்னைத் துயர்ப்படுக்கும்—நல்லாய்!
மணலுள் முழுகி மறைந்து கிடக்கும்
‡ நுணலுந்தன் வாயாற் கெடும்.

---

* நீர்த்து—குணமுடையது.
† புல்லிதழ்—புற இதழ்.
‡ நுணல்—தவளை.

2. மாய்வதன் முன்னே வகைப்பட்ட நல்வினையை
ஆய்வின்றிச் செய்யாதார் பின்னைவழி நினைந்து
நோய்காண் பொழுதின் அறஞ்செய்வார்க் காணுமை
நாய்காணிற் கற்காணு வாறு.

3. உடைப்பெருஞ் செல்வத் துயர்ந்த பெருமை
அடக்கமில் உள்ளத்தனுகி—நடக்கையின்
ஒள்ளியன் அல்லான்மேல் வைத்தால் குரங்கின்கைக்
கொள்ளி கொடுத்து விடல்.

4. நெறியால் உணராது நீர்மையு மின்றிச்
சிறியார் எளியரால் என்று பெரியாரைத்
தங்கணேர் வைத்துத் தகவல்ல கூறுதல்
திங்களை நாய்குரைத் தற்று.

5. கன்றி முதிர்ந்த *கழியப்பல் நாட் செயினும்
என்றும் சிறியார்கண் என்னுனுந் தோன்ருவாம் ;
ஒன்ருய் விடினும் உயர்ந்தார்ப் படுங்குற்றம்
குன்றின் மேல் இட்ட விளக்கு.

நளவெண்பா.

1. நாற்குணமும் நாற்படையா ஐம்புலனும் நல்லமைச்சா
ஆர்க்குஞ் சிலம்பே யணிமுரசா—வேற்படையும்
வாளுமே கண்ணு வதன மதிக் குடைக்கீழ்
ஆளுமே பெண்மை யரசு.

2. செம்மனத்தான் தண்ணளியான் செங்கோலான் [மங்கையர்கள்
தம்மனத்தை வாங்குந் தடந்தோளான்—மெய்ம்மை
நளனென்பான் மேனிலத்தும் நானிலத்தும் மிக்கான்
உளனென்பான் வேந்தன் உனக்கு.

---

* கழிய—மிகுதியாக.

3. விண்ணரச ரெல்லாரும் வெள்கி மனஞ்சுளிக்கக்
கண்ணகல் ஞாலங் களிகூர---மண்ணரசர்
*வன்மாலை தம்மனத்தே சூடவய வேந்தைப்
பொன்மாலை சூட்டினாள் பொன்.

4. ஒற்றைத் துகிலும் உயிரும் இரண்டாக
முற்றும் தன் அன்பை முதலோடும்—பற்றி
அரிந்தான் அரிந்திட்டவள் நிலைமை நெஞ்சில்
தெரிந்தான் இருந்தான் திகைத்து.

5. கானகத்துக் காதலியைக் காரிருளிற் கைவிட்டுப்
போனதுவும் வேந்தற்குப் போதுமோ—தானென்று
சாற்றினான் ; அந்தவுரை தார்வேந்தன் தன்செவியில்
ஏற்றினான் வந்தான் எதிர்.

6. ஒண்டொடி தன்னை உறக்கத்தே நீத்ததுவும்
பண்டை விதியின் பயனேகாண்—தண்†தாளப்
பூத்‡தாம வெண்குடையான் பொன் மகளைத் தன்
நீத்தானென் றைபுரேல் நீ. [மனத்தே

7. பொன்னுடைய ரேனும் புகழுடைய ரேனும் மற்
றென்னுடைய ரேனும் உடையரோ—இன்னடிசில்
புக்களையும் தாமரைக்கைப் பூநாறும் செய்யவாய்
மக்களை இங் கில்லாதவர்.

8. மக்களை முன் காணா மனநடுங்கா வெய்துயிராப்
$புக்கெடுத்து வீரப் புயத்தணையா—"மக்காள்! நீர்
என் மக்கள் போல்கின்றீர் ; யார் மக்கள் ?" என்றுரைத்
வன்மக் களியானை மன். [தான்

9. "மன்னன் நிடதத்தார் வாழ்வேந்தன் மக்கள் யாம் ;
அன்னைதனைக் கான்விட் டவனேக—இந்நகர்க்கே

* வன்மாலை—வலிய மயக்கத்தை; † தாளம்—முத்து.
‡ தாமம்—மாலை; $ புக்கு—புகுந்து.

வாழ்கின்றோம் ; எங்கள் வளநாடு மற்றொருவன்
ஆள்கின்றான் " என்றார் அழுது.

10. கார்பெற்ற தோகையோ கண்பெற்ற வான்முகமோ
நீர்பெற் றுயர்ந்த நிறைபுலமோ—பார்பெற்று
மாதோடு மன்னன் வரக்கண்ட மாநகருக்
கேதோ உரைப்பேன் எதிர்.

---

## சமரசக்கீர்த்தனை.

இராகம் நாதநாமக்கிரியை—ஆதிதாளம்.

பல்லவி.

இந்த வரந் தருவாய்—சுவாமி!
இந்த வரந் தருவாய்.

அனுபல்லவி.

பந்த வினையெல்லாம் அறவேண்டும்—உன்
பாத தெரிசனம் பெறவேண்டும். (இந்த)

சரணம்.

தினமும் பாதமலர் தொழவேண்டும்—நான்
தேக பரவசமா யெழவேண்டும்.
அனல் மெழு காயுருகி யழவேண்டும்—இனி
ஆனந்தக் கடலில் நான் விழவேண்டும். (இந்த)

தேகவிஷ யாதிகள் கெடவேண்டும்—ஞான
தீபத்தை என்னுளத்தில் இடவேண்டும்;
பாக அறப்பயிரை நடவேண்டும்—அந்தப்
பயிர்க்குள் அருட்புனலை விடவேண்டும். (இந்த)

போகப்பி சாசுதனை வெலவேண்டும்—நல்ல
புத்தி நெறியிலே செலவேண்டும்;

நாகமெனும் புலனைக் கொலவேண்டும்—வேத
நாயகனே! உன்னுமம் சொலவேண்டும் (இந்த)

---

ராகம் சங்கராபரணம்—ரூபகதாளம்.

பல்லவி.

பணமே! உன்னால் என்ன குணமே—தண்டம்
பண்ணினேன் சற்றும் என் கண்ணின் முன் நில்லாதே.

அனுபல்லவி.

மணமில்லா மத மோகங்கு ரோதந்துன்
மார்க்கமும் மூர்க்கமும் யார்க்குமே போதிக்கும். (பண)

சரணம்.

1. தேடி உனை வைத்து மூடிய வர்க்கு நீ
தீர்க்காயுசு தரு வாயோ—இனி
நாடி யமன் வந்து சாடிடும்போது நீ
நானென்று முன் வருவாயோ ?
கூடிய பேர்கள் குடியை கெடுப்பாயே ;
கொல்லச் சொல்லிப் பின்னுங் காட்டிக் கொடுப்பாயே ;
ஓடி ஓடி யற்பரைப்போ யடுப்பாயே ;
உத்தமரைக் கண்டால் ஓட்டம் எடுப்பாயே ; (பண)

2. மத்தியில் உன்னைப் படைத்ததல் லால்முன்
வரும்போது கூட வந்தாயோ ?—இஷ்ட
சித்தியும் சத்தியும் நித்தியங் கைகூடச்
சிலாசாசனம் நீதந் தாயோ ?
புத்தி இருக்கும் இடம்விட்டு நீங்குவாய் ;
பொய்யும் புரட்டும் உள்ள இடத் தோங்குவாய் ;
எத்திசையும் கெடுத்துப் பழி வாங்குவாய் ;
ஈயாதவர்கை யகப்பட்டுத் தூங்குவாய். (பண)

3. மண்ணில் உனைநரர் பண்ணின தன்றி
மனிதரை நீ பண்ணினுயோ ?—உயர்
விண்ணினை மண்ணினைப் பண்ணினேன் நேசம்
விலகச்செய் சத்துரு நீயே;
எண்ணரி தான இடமெங்கும் ஓடுவாய் ;
இந்திர ஜாலஞ் செய்துவிளை யாடுவாய் ;
வண்ண நரர்கள் மனக்கண்ணை மூடுவாய் ;
வைத்துப் புதைப்பவர் வாயில் மண் போடுவாய். (பண)

4. வஞ்சக மாயப்பிர பஞ்சமெல் லாம்நீ
வளைத்துச் செய்வாய் கொடுங் கோன்மை ;
நஞ்சம் நிகருனை நெஞ்சம்எண் ணுதமெய்ஞ்
ஞானிகட் கல்லவோ மேன்மை ;
பஞ்சமா பாதகங் கட்குநீ ஆலயம் ;
பாரில் துன்பமென்ப தெல்லாம்உன் றன்மயம் ;
மிஞ்ச உனையுடை யோர்க்கொழி யாப்பயம் ;
வேத நாயகன்மே லுனக்குண்டோ சயம். (பண)

---

## நந்தனுர் சரித்திரம்.

---

### ராகம் செஞ்சுருட்டி—ஆதிதாளம்.

சிதம்பரம் போகாமல் இருப்பேனே—இந்த
ஜென்மத்தை வீணுக்கிக் கெடுப்பேனே ? (சிதம்)

பக்தியுமனமும் பொருந்தின தங்கே ?
சத்தியஞ்சொன்னேன் சடலமுமிங்கே? (சிதம்)

ஆசையும் நேசமும் ஆனந்தமங்கே
பேசலும் பாசமும் பிதற்றலும் இங்கே. (சிதம்)

## இராகம் பியாகு—ஆதிதாளம்.

பல்லவி.

இது தானோ தில்லைத்தலம்—இத்தனை நாளுமறியேன்
இது தானோ தில்லைத்தலம்.

அதுவோ யிதுவோவென் றலைந்திடும் பேயனைக்
கதிதரு வேனென்று கை காட்டி யழைத்திடும் (இதுதா)
காசினி யிலிதைக் கயிலையென் றெல்லோரும்
பேசக்கேட்டதேயன்றி பேணிப்பார்த் தறிகிலேன் (இதுதா)

இராகம்-மாஞ்சை—ரூபக தாளம்.

வருகலாமோ ஐயா உந்தன் அருகினில் நின்றுகொண்
டாடவும் பாடவும்நான் (வரு)
பரமகிருபா நிதியல்லவோ—இந்தப்
பறையனுபசாரஞ் சொல்லவோ—உன்றன்
பரமாநந்தத் தாண்டவம் பார்க்கவே நானங்கே (வரு)
பூமியில் புலையனாகப் பிறந்தேனே நான்
புண்ணியஞ் செய்யாமலிருந் தேனே
சாமியுன் சந்நிதி வந்தேனே—பவ
சாகரத்தையு மிழந் தேனே
கரைகடந்தேனே சரண மடைந்தேனே—தில்லை
வரதா! பரதாபமும் பாபமுந் தீரவே (வரு)

---

## இராம நாடகம்

---

சௌராஷ்டிர ராகம்—ஆதிதாளம்.

பல்லவி.

1. மகுடாபி ஷேகங் கொண்டானே—ஸ்ரீராமச்சந்த்ரன்
மகுடாபி ஷேகங் கொண்டானே.

அனுபல்லவி.

சகல ராஜர்களும், சகல தேவர்களும்,
சகல வேதியரும், சகல ஜாதியரும்,
சகல மந்திரிகளும், சகல தந்திரிகளும்,
சகல முனிவர்களும், சகல மனிதர்களும்,
சந்த்ராதி மூவர்களும், இந்த்ராதி தேவர்களும்
சந்தோஷமாப் பொருந்தச் சிங்காதனத்திருந்து (மகு)
மாதவர்கள் முனிவர்கள் புடை கூடப்
பலபல வேதவேதியர்கள் மறைபாட
வானவர் ஆனவர் மலர்போட
ரம்ப மேனகை ஊர்வசி நடம் ஆட (மகுடா)
மாதலத்துள்ள தீர்த்தமும் ஓது சமுத்திர தீர்த்தமும்
வரிசையுடன் அநுமான் மொண்டுவர
சோதிமிக்க ஆலாத்தி மீதிலக்ஷ்மிப் பெண்கள்
சுபசோபனம் சொல்லிக் கொண்டுவர. (மகுடா)
வானகத்தில் அமிர்தத்தை மானமிக்க முனிவர்கள்
மகிழ்ந்து மகிழ்ந் தாசிகள் விண்டுவர
ஞானமிக்க நாரதர் கானவித்தை முறைமுறை
நானுவிதம் பாடிக் கண்டுவர (மகுடா)
மகதர் குகதர் பலர்! கவுடர் யவனர் பலர்;
வடுகர் குடகர் பலர்; துளுவர் வளவர் பலர்;
வாமா பராக்கு! வெகுநாமா பராக்கு!
ரனவீரா பராக்கு! ரகுராமா பார்க்கு! என (மகுடா)

---

தனிப்பாடல்கள்.

1. எண்ணுன்கு முப்பத்திரண்டு பல் காட்டி [இசையுடனே
பண்ணுகச் செந்தமிழ் பாடிவந்தாலும் இப்பாரிலுளார்
அண்ணுந்து கேட்பர்; அழகழ கென்பர்; அதன் பிறகு
சுண்ணம்பு பட்ட இலையுங் கொடார் கவிசொன்ன வர்க்கே.

—இராமச்சந்திர கவிராயர்.

2. வஞ்சகர் பால் நடந்தலைந்த காலிற் புண்ணும்
வாசல் தொறும் முட்டுண்ட தலையிற் புண்ணும்
செஞ்சொல்லை நினைந்துருகும் நெஞ்சிற் புண்ணும்
தீருமென்றே சங்கரன் பால் சேர்ந்தேன் அப்பா ?
கொஞ்சமல்ல பிரம்படியின் புண்ணும் வேடன்
கொடுங்காலால் உதைத்த புண்ணும் கோபமாகப்
பஞ்சவரில் ஒருவன் வில்லா லடித்த புண்ணும்
பாரென்றே காட்டி நின்றான் பரமன்றானே—ஷியார்.

3. அரிதரிது மானிடராத லரிது ;
மானிட ராயினுங் கூன் குருடு செவிடு
பேடு நீங்கிப் பிறத்த லரிது ;
பேடு நீங்கிப் பிறந்த காலையும்
ஞானமுங் கல்வியு நயத்தலரிது ;
ஞானமுங் கல்வியு நயந்தகாலையும்
தானமுந் தவமுந் தான் செயலரிது ;
தானமுந் தவமுந் தான் செய்வராயின்
வானவர் நாடு வழிதிறந்திடுமே. —ஔவையார்.

---

பாம்புக்கும் எள்ளுக்கும் சிலேடை.

4. ஆடிக் குடத்தடையும்; ஆடும்போ தேயிரையும் ,
மூடித் திறக்கின் முகங்காட்டும் ;—ஓடிமண்டை
பற்றிற் பரபரெனும் ; பாரிற் பிண்*ணாக்குமுண்டாம்;
உற்றிடுபாம் பெள்ளெனவேயோது. —காளமேகப்புலவர்.

5. அானவ னிடத்திலே பைங்கரன் வந்துதான்
'ஐய என் செவியை மிகவும்,
அறுமுகன் கிள்ளினா' னென்றே சிணுங்கிடவும்,
அத்தன்வே லவனை நோக்கி,

* பிண்ணாக்கு—பிளவான நாக்கு.

விரைவுடன் வினவே 'அண்ணனென் *சென்னியில்
விளங்குகண் ணெண்ணினன்' என
வெம்பிடும் பிள்ளையைப் பார்த்துநீ யப்படி
விகடமேன் செய்தாயென,
'மருவு மென் கைந்நீளம் முழமளந் தான்' என்ன
மயிலவன் நகைத்து நிற்க
மலையரைய னுதவவரும் உமையவளை நோக்கி நின்
மைந்தரைப் பாராய் எனக்
கருதரிய கடலாடை உலகுபல அண்டங்
கருப்பமாய்ப் பெற்ற கன்னி
கணபதியை யருகழைத் தகமகிழ்வு கொண்டனள்.
களிப்புடனுமைகாக்கவே. —சிவப்பிரகாச சுவாமிகள்.

---

IV. (*a*) நாடகம் நடித்தல் மேல் 4-ஆம் வகுப்பிற் போலவே. தேச சரிதப் பகுதிகளை அதிகமாக நடித்தல்.

IV. (*b*) உயர்ந்த வசன பாகங்கள் ஒப்பித்தல்.

---

### (1) †அறிவு வளர்ச்சி.

இந்து தேசம்போல் பூமியில் வெகு தேசங்கள் உளவென்றும் மதி நுட்பமும் விஷயங்களை அறிதற் குரிய இச்சையும் உழைப்பும் மனிதர்களுக்குப் பொதுவான குணங்களே யொழிய, ஒரு நாட்டிற்குள்ளே உற்பத்தியாகிற சாதனங்கள் அல்லவென்றும் உணர்ந்தவர்கள் அன்னிய தேசவாசிகள் வழியாயும் நாம் அறியத் தக்கவை பலவும் இருக்கும் என்று ஒப்பாதொழியார். அப்படி ஒப்புதல் நமது முன்னோர் மேல் வைக்கத்தக்க பக்திக்கு இழுக்கும் அன்று. கேவலம் மதி நுட்பத்தால் மாத்

---

* சென்னி—தலை; † திருவநந்தபுரம் Professor P. சுந்தரம் பிள்ளை, M. A.

திரமன்றித் தூரதேச சஞ்சாரத்தாலும் கருவி விசேஷத்தாலும் விளைகிற அனுபவப் பெருக்கால் அறியத் தக்கவைகள், பூமியின் பாலிய காலமாகிய பழைய காலத்தில், அறியப்பட வில்லையென்று கூச்சம் இன்றிக் கூறுவதில் குறைவென்னை! ஒரு தேசத்தார் விஷய ஆராய்ச்சியை விட்டு யாதேனும் ஒரு காரணத்தால் ஓய்வடைந்தாராயின் மற்றெல்லாத் தேசத்தாரும் அப்படியே ஓய்வடைந்தார் ஆகவேண்டிய தில்லையே. வித்தியா ரூபிணியாகிய கலைமகள் நாடோறும் தூக்கமின்றிக் கல்வி பயில்கிறுள் என்பதின் பொருள் தான் என்னை? ஆதலால் பூர்வீகர்கள் மேல் உண்மையான பக்தியும் தேசாபிமானமும் உடையோர், முன்னோர் நூல்களை அன்புடன் ஆராய்வதோடு, நூதனமான அன்னிய தேசத்தாரால் ஸ்தாபிக்கப்பட்டிருக்கும் நூல்களையும் கற்றறிந்து கலந்து, "பழையன கழிதலும் புதியன புகுதலும் வழுவல கால வகையினனே" என்னும் முதுமொழியை மறவாது அவரவர்களால் கூடிய அளவு நம் முன்னோர் உழைத்தபடி உண்மையறிய உழைத்து ஜனசமுதாய அறிவை வளர்க்கக் கடமைப் பட்டவர்களாக இருக்கிறுர்கள்.

---

## (2) *வீதிவிடங்கன் சரித்திரம்.

காவிரி என்னும் நதியினுல் எந்தக் காலத்திலும் குறைவு படாத நீர் வளப்பமுள்ளதாய் வாழைச்சோலை, பலாச்சோலை மாஞ்சோலை, தென்னஞ்சோலை, கமுகஞ்சோலை, கருப்பஞ்சோலை முதலாகிய பலனுள்ள சோலைகள் அணியணியாக ஒன்றையொன்று சூழ்ந்தோங்கப் பெற்றதாய், சிதம்பரம், மத்யார்ச்சுனம், பஞ்சநதம், ஜம்புகேசுவரம் முதலான திவ்ய க்ஷேத்திரங்

*மனுமுறை கண்டவாசகம்—ஸ்ரீ இராமலிங்க சுவாமிகள்

களை இடையிடையில் உள்ளதாய், விளங்குகின்ற சோழ தேசத்திலே திருவாரூர் என்று ஒரு நகரம் உண்டு. அந்நகரத்திலே மூன்று சுடர்களிலும் முதற் சுடராகி மேன்மையடைந்த சூரிய குலத்திற் பிறந்து, அரசாட்சி செய்துவந்த சோழராஜர்களிற் சிறந்தவராய், எல்லாவுயிர்களுக்கும் இதம் செய்கின்றவராய், வேதமோதுதலும், யாகஞ்செய்தலும் இரப்பவர்க்கீதலும், பிரஜைகளைக் காத்தலும், ஆயுதவித்தையிற் பழகுதலும், பகைவரை யழித்தலும் என்னும் ஆறுதொழிலும் உடையவராய், வழக்கை யறிவிப்பவரையும், தங்களுக்குள்ள குறைகளைச் சொல்லிக் கொள்பவரையும் இலேசிலே தமது சமுகத்துக்கு அழைப்பித்து அந்த வழக்கைத் தீர்த்தும் அக்குறைகளை முடித்தும் கொடுப்பவராய், பாலொடு பழஞ்சேர்ந்தாற் போல முகமலர்ச்சியோடு இனிய வசனம் சொல்பவராய், தர்மமே உருவாகக் கொண்டு நடுநிலையிலிருந்து மனுநீதி தவறாது விளங்கிய மனுச்சோழன் என்னும் பெயரையுடைய சக்கரவர்த்தியானவர் செங்கோல் செலுத்தி அரசாட்சி செய்து வந்தார்.

---

## *கடன்படல்.

பொருளில்லையானால் கூலித்தொழில் செய்து வயிறுவளர்க்கினும் வளர்க்கலாம்; பிச்சையேற்று உண்ணினும் உண்ணலாம்; பசிநோயால் வருந்தி இறக்கினும் இறக்கலாம்; இவைகளெல்லாம் அவமானங்களல்ல; இவைகளினாலே பிறருக்கு யாதொரு கேடுமில்லை. இவைகளினால் ஒருவருக்கும் அஞ்சவேண்டுவதில்லை. இவைகளினாலே துன்ப முண்டாகினும் அத்துன்பமோ மிகச்சிறிது. அச்சிறு துன்பமும் நல்லறிவோடு அமைந்து சிந்

---

*ஆறுமுக நாவலர் 4-ஆம் பாலபாடம்.

திக்கும்போது நீங்கிவிடும். கடனே இப்படிப்பட்டதன்று, பெரு வியாதிமுதலிய கொடு நோய்களினால் உண்டாகும் துன்பத்தைப் பொறுக்கினும் பொறுக்கலாம்; கடனாலுண்டாகும் துன்பத்தைப்பொறுத்தல் அரிது அரிது. கடன்படக் கூசாதவர் பொய் சொல்லக் கூசார், பொய் வழக்குப் பேசக்கூசார், விசுவாசகாதகம் செய்யக்கூசார்; கொலை செய்யக்கூசார். கடன்படல் எல்லாப் பாவங்களையும் வலிந்து கைபிடித்தழைக்கும் தூது.

VI. வாசகம்:—ஒரு அங்கீகாரமான வாசக புஸ்தகமும் மற்றொரு தகுதியான உப புஸ்தகமும்.

தமிழ்ப் பாடதிட்டம் முற்றிற்று.

---

## கணிதப்பாட திட்டம்

---

### V வகுப்பு.

பணசம்பந்தமாயும், வியாபார சம்பந்தமாயும்.

தனிவட்டி, ஸ்தலவட்டி.

ரொக்கவட்டி, தானியவட்டி, தரகு.

ஒழுங்கற்ற உருவமுள்ள நிலத்தின் அளவை.

கோலால் அளத்தல், சங்கிலியளவு.

குழிமாற்று—லாப நஷ்டத்தில் கடினக் கணக்குகள்.

பலவிதக் கடைக் கணக்குகள்.

இங்கிலீஷ் நாணயமும் அவைகளை இந்திய நாணய மாற்குதலும் அதன் எதிரிடையும்.

---

## பொது அறிவுப்பாட திட்டம்

---

### V. வகுப்பு.

1. இந்தியா:—பொது விவரம்—இமயமலை—கணவாய், மேடு பள்ளங்கள் (பூகோள பாட சம்பந்தமாயும் சரித்திர

17733

பாடத்திற்கு அனுகுணமாயும்) தக்ஷிண பீடபூமி—கடற்கரை—கிழக்கு மேற்குத் தொடர் மலைகள்—நதிகளின் போக்கு.

2. நிலத்தின் தன்மை—விளைபொருள்:—கைத்தொழி—போக்கு வரவுக் குரியசாதனம்—ஆதி ஜனங்கள்—நாகரீ வளர்ச்சி—ஆரியர்களின் சரித்திரம் (மேல் நோக்காக)—போரஸும் அலெக்ஸாண்டரும்—மகம்மதிய ராஜ்யத்தி வளர்ச்சி— அக்பர் — ஔரங்கசீப் — மொகலாய வம்சத்தி க்ஷீணதெசை — சிவாஜி — மகாராஷ்டிரர்களின் வளர்ச்சி—கீழிந்திய கம்பெனி—நகரங்களின் உற்பத்தி—சென்னப பட்டணம்—பம்பாய் இன்னும் இவை போன்றவைகள்—இங்கிலீஷ் அரசாட்சியின் அம்சங்கள்—கிளைவ்—ஹேஸ்டிங்—கார்ன் வாலிஸ் — பெண்டிங் — டெல்ஹௌஸி — கான்—ரஞ்சிட்சிங்—சிக்கியர்கள்—ரிப்பன் ஹார்டிஞ்சு சீர்திருத்த கள்.

3. வரிகள்:—(*a*) உண்ணாட்டுவரி:—நிலவரி—ஆப்கா வரி—காட்டு வரி.

(*b*) இம்பீரியல் வரி:—வருமான வரி—தபால், ரயில் வரி—உப்பு வரி.

(*c*) ஸ்தலவரி—வீட்டுவரி—தொழில் வரி—வண்டி முதலியன. பொதுவாய் வருமான இலாகா—செலவா இலாகா—சட்டசபை—ஓட்டு கொடுப்பவர்களின் கூட்ட அவர்களின் வேலை.

ஜனசமூக ஊழியம்:—நகரபரிபாலன சபையாரும் சாயத்தாரும் சரியாய் நடத்தல்—ஒற்றுமை உணர்ச்சி—விவ பாங்கிகளும் டவுன் பாங்கிகளும்—அவைகளில் கொடு வாங்கல்—பலவகை எருக்கள்—ஒருபோக இருபோக படி—பாய்கால் வடிகால்—திடீரென்று ஏற்படும் ஆப ளும், பிரதம சிகிச்சைகளும்.

---

PRINTED AT THE B. N. PRESS, MOUNT ROAD, MAD

## கிரகங்கள் 9.

| | | | | |
|---|---|---|---|---|
| சூரியன் | செவ்வாய் | வியாழன் | சனி | கேது |
| சந்திரன் | புதன் | சுக்கிரன் | ராகு | |

## ராசிகள் 12.

| | | | |
|---|---|---|---|
| மேஷம் | கடகம் | துலாம் | மகரம் |
| ரிஷபம் | சிம்மம் | விருச்சிகம் | கும்பம் |
| மிதுனம் | கன்னி | தனுசு | மீனம் |

## திதிகள் 15.

| | | | |
|---|---|---|---|
| பிரதமை | பஞ்சமி | நவமி | திரயோதசி |
| துவிதியை | ஷஷ்டி | தசமி | சதுர்தசி |
| திருதியை | ஸப்தமி | ஏகாதேசி | பௌர்ணிமை அல்லது- |
| சதுர்த்தி | அஷ்டமி | துவாதேசி | அமாவாஸ்யை |

## ருதுக்கள் 6.

| | | |
|---|---|---|
| வஸந்தருது | வருஷருது | ஹேமந்தருது |
| கிரீஷ்மருது | சரத்ருது | சிசிருது |

## பர்வ காலங்கள் 6.

| | | |
|---|---|---|
| இளவேனிற்காலம் | மழைகாலம் | முன்பனி காலம் |
| முதுவேனிற்காலம் | கூதிர்காலம் | பின்பனி காலம் |

## அயனங்கள் 2

தை மாதம் முதல் ஆனி மாதம் முடிய 6-மாதங்களுக்கு உத்தராயணம் என்று பெயர்.

ஆடி மாதம் முதல் மார்கழி மாதம் முடிய 6-மாதங்களுக்கு தக்ஷிணாயனம் என்று பெயர்.

## தமிழ்லக்கங்கள் 10.

| | | | |
|---|---|---|---|
| க | ஒன்று | சா | ஆறு |
| உ | இரண்டு | எ | ஏழு |
| ந | மூன்று | அ | எட்டு |
| ச | நான்கு | கூ | ஒன்பது |
| ரு | ஐந்து | க0 | பத்து |

1392/1139

# C. S. DIKSHITAR & CO.,

***Publishers of Uttamar Charitam and S. Venkatarama Sastri's Sanskrit works and Agents for the Swadesamitran.***

## உத்தமர்கள் சரிதம்

## மலர் 1, 2, 3, 4, 5.

N. பரமசிவ அய்யர், B.A., L.T. & V. சந்தானம் அய்யங்கார், B.A., L.T.

### சில முக்கிய அபிப்ராயங்கள்.

தாங்கள் இயற்றி வெளியிட்டுள்ள "உத்தமர்கள் சரிதம்," மலர்களைப் படித்துப்பார்த்தேன். அவற்றில் விஷயங்கள் நன்கு தெரிந்தெடுக்கப்பெற்றுத் தக்க அளவில் சுலபமான நடையில் எழுதப்பட்டிருப்பது பாராட்டத்தக்கது. இப் புஸ்தகங்கள் பாலபாடசாலை உபாத்திமார்களுக்கு ஓர் அரு நிதி போன்றவை. அன்றியும், மாணாக்கர்களும் படித்துப் பயிலுமாறு, சுருக்கமாகவும் நல்ல எழுத்திலும் இப்புஸ்தகங்கள் அமைந்திருக்கின்றன. இவைகளை உபாத்தியாயர்கள் பாடசாலைகளில் போற்றிக் கையாள்வார்களாக.

(ஒப்பம்) வே. முத்துஸாமி ஐயர், M.A., L.T.,
*Deputy Inspector of Schools, Negapatam Range, Tiruvalur*
*& Member, Madura Tamil Sangam, Tamilian Archaeological Society*

### நமது பிரசுரங்கள்.

| | | | | | |
|---|---|---|---|---|---|
| உத்தமர் சரிதம் மலர் | 1 | ... | 0 | 2 | 0 |
| * Do. | 2 | ... | 0 | 3 | 0 |
| * Do. | 3 | ... | 0 | 4 | 0 |
| * Do. | 4 | ... | 0 | 5 | 0 |
| Do. | 5 | | 0 | 7 | 0 |
| * Katha Kusuma Manjari Part | I | ... | 0 | 8 | 0 |
| * Do. | II | ... | 0 | 10 | 0 |
| Do. | III | ... | 0 | 8 | 0 |
| Vikramarka Charitram | | ... | 0 | 8 | 0 |
| Subashithamanjari | | ... | 0 | 6 | 0 |
| Sabdamanjari | | ... | 0 | 4 | 6 |
| Prathama Patamanjari | | ... | 0 | 5 | 0 |
| Boja Charitra Sangraham | | ... | 0 | 4 | 0 |

*** Approved by the Madras Text-Book Committee.**
* துரைத்தனத்தாரால் அங்கீகரிக்கப்பட்டவை.

உபாத்தியாயருக்கும், வியாபாரிகளுக்கும் தகுந்த கமிஷன் கொடுக்கப்படும்.

*புஸ்தகங்கள் அடியிற் கண்டவர்களிடம் கிடைக்கும் :—*

C. S. தீக்ஷதர் அண்டு கோ,
புஸ்தகம் ஸ்டேஷனரி வியாபாரம்.

ஏஜண்டு :—சுதேசமித்திரன், கும்பகோணம்.